உ

சிவ சிவ

# ஸ்ரீ இராமேஸ்வரம் - தனுஷ்கோடி

# தல வரலாறு

சென்னை அறநிலைய ஆட்சித் துறை ஆணையாளர்

உயர்திரு. K. S. நரசிம்மன், B. A., B. L., I. A. S.

அவர்களது அணிந்துரையுடன்



ஸ்ரீ இராமநாதஸ்வாமி தேவஸ்தான வெளியீடு

**1971**

பிரதிகள் 5000] [விலை 60 பைசா

இவ்வெளியீடு, சென்னை கிடங்குத் தெரு, 3/96 ஆம் எண் ஸ்ரீ பாலசுப்ரமண்யம் குழுவினர்தம் சமய தான நிதியும், ஷை வீதி No. 5 குமார்பிரதர்ஸ் நிதியும் கொண்டு வழங்கப் பெறுகிறது.

முதல் வெளியீடு 1900 பிரதிகள் மார்ச் 1966
இரண்டாவது ௸ 2000 பிரதிகள் மார்ச் 1967
மூன்ருவது ௸ 5000 பிரதிகள் பிப்ரவரி 1968
நான்காவது ௸ 5000 பிரதிகள் ஜனவரி 1971

உ

சிவ சிவ

# தர்மகர்த்தாக் குழுவினர்

உ

சிவ சிவ

# ஸ்ரீ இராமேசுவரம்-தனுஷ்கோடி

# தல வரலாறு

(ஸ்தல சம்பந்தமான படங்களுடன்)

ஆசிரியர் :

A. உத்தண்டராமன், B.A., B.L., I.A.S. (Retd.)

(முன்னைய அறநிலையப் பாதுகாப்புத் துறை ஆணையர்)

ஸ்ரீ இராமநாதசுவாமி தேவஸ்தான வெளியீடு

*முதல் வெளியீடு 1900 பிரதிகள் மார்ச் 1966*
*இரண்டாவது ஷை 2000 பிரதிகள் மார்ச் 1967*
*மூன்றாவது வெளியீடு 5000 பிரதிகள் பிப்ரவரி 1968*
*நான்காவது வெளியீடு 5000 பிரதிகள் ஜனவரி 1971*

1. "இக்கோவிலின் பூஜகர்கள், கண்காணிப்பாளர்கள் ஆகியவர்களின் விநயத்தினையும், இறை ஊழியத்தினையும் மெய்யாகக் கண்டு கூறுவதில் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன்."

—ஸ்ரீ விவேகானந்தர்.

2. "ஸ்ரீ இராமநாதசுவாமி தங்கட்கு அமைதியினையும், மகிழ்ச்சியினையும் வெற்றியினையும் வலிமையினையும் மங்களத்தினையும் நீண்ட வாழ்நாளையும் கைவல்ய மோக்ஷத்தையும் அருள்வாராக."

—ஸ்ரீ ஸ்வாமி சிவானந்தா.

*பார்க்கர் பிரஸ், சென்னை-1.*

சிவ சிவ

# உள்ளுறை

## பிற்சேர்க்கை

உ

ஓம்

சிவ சிவ



மண்ணுல கத்தினிற் பிறவி மாசற
எண்ணிய பொருள் எல்லாம் எளிதின் முற்றுறக்
கண்ணுதல் உடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்.



இராமலிங்கப் பிரதிஷ்டை

# அணிந்துரை

**திரு. கே. எஸ். நரசிம்மன், B.A., B.L., I.A.S.,**
*ஆணையர், அறநிலைய ஆட்சித்துறை, தமிழ்நாடு அரசு.*

இராமேசுவரம் இந்திய நாட்டுத் தலங்களுள் பெரும் சிறப்பு வாய்ந்ததொன்று. இந்தியாவிலுள்ள மிகவும் புகழ் பெற்ற சோதிலிங்கத் தலங்களுள் இராமேசுவரமும் ஒன்றுகப் பெரும் சிறப்புற்று விளங்கி வருகின்றது. இராமாயண காலந்தொட்டே இத்தலம் மிகவும் புனிதம் வாய்ந்ததாகப் போற்றப் பெற்று வருகின்றது. திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், அருணகிரிநாதர், தாயுமானவர் முதலிய சான்றோர்கள் பற்பலர் இத்தலத்தினைத் தமது பாடல்களால் புகழ்ந்து துதித்துள்ளனர்.

இத்தகைய பெரும் சிறப்பு வாய்ந்த இத்தலத்தின் வரலாற்றைத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தின் அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள் அவர்களின் திருவுளப்பாங்கின்படி, சென்னை அறநிலைய பாதுகாப்புத் துறையின் முன்னைய ஆணையர் உயர்திரு அ. உத்தண்டராமன், B.A. B.L , I.A.S., (Rtd.,) அவர்கள், மிகவும் சிறந்த முறையில் எழுதி அளித்திருக்கின்றார்கள். இதற்கு முன்னாள் அறநிலைய ஆணையர் திரு. மா. சே. சாரங்கபாணி முதலியார் B.A., B.L., அவர்கள் அழகிய நல்ல மதிப்புரை எழுதி இருக்கின்றார்கள்.

பக்தர்களுக்கும் யாத்திரீகர்களுக்கும் மிகவும் பயன் படத் தகுந்த இந்நூலைச் சென்னை கிடங்குத் தெரு ஸ்ரீ பாலசுப்பிரமணியம் கம்பெனியாரும், குமார் சகோதரர்களும் சேர்ந்து, தமது சமயப் பணிகளில் ஒன்றுகக் கருதி, மிக்க அன்புடன் வெளியிடுகின்றார்கள்.

இவ்விரு நிறுவனங்களும் செய்து வருகின்ற அறத் திருப்பணிகள் மிகப் பலவாகும். குமரி முதல் இமயம் வரை,

இவர்கள் பல அறங்களைச் செய்து வருகின்றார்கள். கன்னியாகுமரி, இராமேசுவரம், பழநி, மதுரை, திருவானைக் காவல், திருவண்ணாமலை, திருப்பதி, திருத்தணி, பத்ரிநாத், கேதாரம் முதலிய முக்கிய தலங்களுள் உள்ள திருக்கோயில் களில் மூலத்தானத்தின் வெள்ளி அகண்ட விளக்குகள் அமைத்து, அவைகள் நிரந்தரமாக எரிந்து கொண்டிருக்கும் வகையில் நெய்க்கு வேண்டிய செலவுக்குப் போதுமான மூல நிதியையும் வழங்கி அறக்கட்டளைகள் அமைத் துள்ளனர்.

மற்றும் இவ்விரு நிறுவனங்களும் திருவாவினங்குடி, திருத்தணிகை, சென்னைக் கந்தக்கோட்டம் திருவானைக்கா ஜம்புகேசுவரம், சமயபுரம் மாரியம்மன் கோயில் முதலிய வற்றில் நடந்த கும்பாபிஷேகங்களின்போது, அவற்றிற்கு அடுத்து உடனே நிகழும் மகாபிஷேகங்களை மிக விமரிசை யாகப் பல்லாயிரக்கணக்கான ரூபாய்ச் செலவில், அவ்வப் போது செவ்விதின் முறையே மிக்க பேரன்புடன் செய்வித் துள்ளனர்.

இங்ஙனம் பற்பல சிறந்த சமய அறப்பணிகளைச் செய்து தொண்டாற்றிவரும் ஸ்ரீ பாலசுப்பிரமணியம் கம்பெனியாரும், குமார் சகோதரர்களும், "இராமேசுவரம்-தனுஷ்கோடி வரலாறு" என்னும் இந்நூலையும் அச்சிட்டு வெளியிடுவது, மிகவும் போற்றிப் பாராட்டுதற்குரியது. இந்நூலில் இராமேசுவரம்-தனுஷ்கோடி பற்றிய எல்லாத் தகவல்களும், நன்கினிது தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. இந்நூல் வெளியீட்டுக்கு உறுதுணை புரிந்த பெருமக்கள் அனைவருக்கும் எனது இதயங் கலந்த அன்பினையும் பாராட்டினையும் வணக்கங்களையும் தெரிவித்துக் கொள் கின்றேன். பர்வத வர்த்தனி சமேத ஸ்ரீ இராமநாதசுவாமி யின் திருவருள், உலகமெங்கணும் அமைதியும் இன்பமும் தழைத்தோங்கத் துணை புரிவதாகுக.

K. S. நரசிம்மன்,

16—1—71.

சென்னை மாநில அறநிலையப் பாதுகாப்புத்துறை
முன்னைய ஆணையர்

உயர்திரு. M. S. சாரங்கபாணி முதலியார், பி.ஏ., பி.எல்.,
அவர்களது

## மதிப்புரை.

முன்னாள் சென்னை மாநில அறநிலையப் பாதுகாப்புத் துறை ஆணையர் திரு, அ. உத்தண்டராமன் அவர்கள் எழுதியுள்ள இந்நூலுக்கு மதிப்புரை வழங்கும் வாய்ப்பை எனக்கு அளித்தமைக்கு மிகவும் மகிழ்ச்சி யடைகிறேன். திருப்பனந்தாள் மட அதிபர் தவத்திரு காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் இத்தகைய நூலொன்று வெளிவரவேண்டுமென்று கருதிச் சென்னை ஸ்ரீ பாலசுப்பிர மணியம் கம்பெனி திரு. K. P. சண்முகம் பிள்ளையிடம் தம் கருத்தைத் தெரிவித்தனர். ஆண்டு முழுவதும் இத்தலத் திற்கு வரும் எண்ணற்ற மக்களுக்குப் பயன்படும் வகையில் எழுதப்பெற்ற இந்நூலை வெளியிடுவதற்குத் தேர்ந்தெடுக் கப்பட்டவரும், இந்நூலை எழுதும் பணியை ஒப்புவிக்கப் பட்டவரும் தக்கவர்களாக அமைந்துள்ளனர்.

இந்நூலாசிரியர் இம் மாநில அறநிலையங்களை நிர்வகிக் கும் பொறுப்பைப் பல ஆண்டுகள் ஏற்று நடத்தியவர். அற நிலையங்களில் தெய்வமணங் கமழும் வகையில் பல அரிய பணிகளைச் செய்தவர். இயற்கையாகவே சமயப் பற்றுள்ளவராதலால், மேல் நாட்டு நாகரிக மோகத்தாலும் பிற மதத்தினர் போதனைகளாலும் பிற காரணங்களாலும் சென்ற இரண்டு நூற்றுண்டுகளாகப் பாதிக்கப்பட்ட விக்ரக ஆராதனை போன்ற இந்துமதக் கொள்கைகளின்

உண்மையான அடிப்படைத் தத்துவங்களை மக்களிடம் பரப்பி, தேவாலயங்களின் புனிதத்தன்மையும் ஆலய வழி பாட்டுக்குரிய நித்திய நைமித்திகப் பூசைகள் விழாக்களின் தத்துவங்களையும் அவற்றின் சிறப்பையும் மீண்டும் உயரிய நிலைக்குக் கொண்டுவர தன்னாலியன்ற அளவு பணியாற்று வதையே குறிக்கோளாகக் கொண்டவர். இம் மாநிலத்தி லுள்ள எல்லாப் பாடல் பெற்ற தலங்களுக்கும் பிற முக்கிய மான தலங்களுக்கும் சென்று அவற்றைப் பற்றிய விவரங் களை நன்கறிந்துள்ள அவர் இராமேசுவரம், தனுஷ்கோடி பற்றிய நூல் எழுத மிகவும் தகுதியுள்ளவர். இத்தலங் களுக்கு நம் நாட்டவர் மட்டுமின்றி வடநாட்டவர்களும் ஏராளமாக வருவதால் இந்தி மொழி பெயர்ப்பும் தமிழ் நாட் டினருக்குப் பயன்படும் வகையில் தமிழாக்கமும் செய்யப் படுவது பொருத்தமே.

இந்நூலில் இராமேசுவரம், தனுஷ்கோடி பற்றிய எல்லா விவரங்களும் குறிக்கப்பட்டுள்ளன. இத்தலங்களின் தெய் வீகச் சிறப்பு, மூலக் கோயில் வரலாறு, தனிக் கோயில் களின் சிறப்பு, திருவிழாக்கள், யாத்திரிகர்களுக்கான வசதிகள், இராமேசுரத் தீவின் அமைப்பு ஆகியன எல்லாம் இடம் பெற்றுள்ளன. தீவின் அமைப்பையும் பகுதிகளையும் காட்டும் படமொன்றும் சேர்க்கப்பட்டுள்ளது.

இந்நூலைப் படித்துப் பின் ஆலய வழிபாட்டுக்குச் செல் பவர்கள் மிகவும் பயன் பெறுவார்கள். தல யாத்திரை செய்யும் அடியார்கள் இந்நூலாசிரியர்க்கு மிகவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளனர்.

திருப்பனந்தாள் மட அதிபர் கருத்துக்கிணங்கப் பயனுள்ள இந்நூலைத் தங்கள் டிரஸ்ட் மூலம் வெளியிட முன் வந்துள்ள ஸ்ரீ பாலசுப்பிரமணியம் கம்பெனியாருக்கும்

இந்து மக்கள் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளனர் இவர்கள் குமரி முதல் இமயம் வரை காசி, திருப்பதி, திருத்தணி, திருவானைக்கோயில், பழனி, மதுரை முதலிய பல தலங்களில் வெள்ளி அகண்ட விளக்குகள் அமைத்து அரும் பெரும் தொண்டாற்றியுள்ளனர். அவர்கள் தாங்களும் தங்கள் நண்பர்கள் சிலருடன் கூடியும் கன்யாகுமரி ஆலயத்துக்கு வேண்டிய எல்லாப் பூஜை சாமான்களையும் வெள்ளியில் செய்து கொடுத்தும், மூலத்தானக் கதவுகளுக்கும் படிகளுக்கும் வெள்ளித் தகடுகள் பொருத்தியும், அம்பிகை சந்நிதி பேரழகுடன் கைலாச பர்வதத்திலுள்ள வெள்ளியங் கிரியே என்னும்படி பிரகாசிக்கச் செய்துள்ளனர். அவர்களின் இவ்வரிய தொண்டு அவர்கள் அடிச்சுவட்டைப் பின்பற்றிப் பல அன்பர்கள் இத்தகைய திருப்பணிகளில் ஈடுபடச் செய்ய ஒரு வழிகாட்டியாக அமையும்.

அறப் பணிகளுக்கு ஏராளமான நிதியை ஒதுக்கி அருந்தொண்டாற்றிப் புகழ் பெற்று விளங்கும் திருப்பனந்தாள் மட அதிபர் ஸ்ரீ பர்வதவர்த்தனி சமேத ஸ்ரீ இராமநாத சுவாமியிடம் மிகவும் ஈடுபாடுடைய பெரியார். தமிழ் நாட்டில் தான் செல்லும் ஒவ்வொரு தலத்திலும் என்னென்ன தேவை என்பதை உணர்ந்து செய்யும் பண்புபெற்ற அப் பெரியார் இராமேசுவரத்தில் உள்ள ஸ்ரீ பர்வதவர்த்தனி அம்பாள் பெண்கள் உயர்நிலைப்பள்ளியில் சமஸ்கிருதம் போதிப்பதற்காக நிதி கொடுத்துதவியுள்ளனர். அதற்கு அன்னாருக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். திருநெல்வேலியில் உள்ள ஸ்ரீ காந்திமதி அம்மாள் பெண்கள் உயர்நிலைப் பள்ளிக்கும் அத்தகைய நிதியொன்றை அளித்துள்ளனர். இந்து மதத்தைப் பற்றி யறிந்துகொள்ள வேண்டுமாயின் சமஸ்கிருதம் எவ்வளவு அவசியமென்பதை இந்த நிதிகளை நிறுவ அன்னார் ஏற்படுத்தியுள்ள பத்திரங்களில் நன்கு விளக்கி

யுள்ளார். நம் மாநிலத்திலுள்ள மடங்களும் சமய நிலையங்களும் அன்னாருடைய தொண்டை வழிகாட்டியாகக் கொண்டு செயல்புரிய முன்வருமென்று நம்புகிறேன். இத்தகைய நூலை வெளியிட மூலகாரணமாக இருந்த இப் பெரியாருக்கு இந்துமக்கள் பெரிதும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளனர்.

இராமேசுவரம், தனுஷ்கோடிக்கு வரும் எல்லாப் பக்தர்களும ஸ்ரீ பர்வதவர்த்தனி சமேத ஸ்ரீ இராமநாத சுவாமியின் பரிபூரண கிருபையைப் பெற்றுய்வார்களாக.

M. S. சாரங்கபாணி

*26—11—65*

---

*சென்னை அறநிலையப் பாதுகாப்புத்துறை முன்னைய ஆணையர்.*
*உயர்திரு* **A. உத்தண்டராமன், B.A., B.L., I.A.S. (Retd)**
*அவர்களது*

# முன்னுரை

நம் நாட்டிலுள்ள தலங்களுள் சிறந்து விளங்கும் இராமேசுவரம்-தனுஷ்கோடிக்கு நம் நாட்டினர் மட்டுமின்றி உலகத்திலுள்ள பல்வேறு நாட்டினரும் வருகின்றனர். அவர்கள் எல்லாருக்கும் பயன்படும் வகையில் ஆங்கிலம், இந்தி, தமிழ் ஆகிய மும்மொழிகளிலும் தல வரலாறு வெளியிட வேண்டுமென்று திருப்பனந்தாள் காசிமட அதிபர் ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் கருதினர். இக் கருத்தைச் சென்னை ஸ்ரீ பால சுப்பிரமணியம் கம்பெனியாரிடமும் ஸ்ரீ குமார் பிரதர்ஸ் கம்பெனியாரிடமும் வெளியிட்டு, இந்நூலை எழுதும் பணியை என்னிடம் ஒப்புவித்ததன் பயனாக இச் சிறு நூல் என் சிற்றறிவுக்கேற்ற அளவில் எழுதப் பெற்றது.

தல வரலாறுகள் எழுதும் தகுதி எனக்குச் சிறிதேனுமில்லை என்றாலும், இந்நூலை வெளியிட முன் வந்துள்ள இரு நிறுவனங்களும் செய்துள்ள அறத்திருப்பணிகளை நன்கறிந்துள்ள என்னால் அவர்கள் விருப்பத்தைத் தவிர்க்க இயலவில்லை. குமரி முதல் இமயம்வரை கன்யாகுமரி, இராமேசுவரம், திருவண்ணாமலை, காசி, பத்ரிநாத், கேதாரம் முதலிய முக்கிய தலங்களில் உள்ள திருக்கோயில்களில் மூலத்தானத்தில் வெள்ளி அகண்ட விளக்குகள் அமைத்த தோடல்லாமல் அவ் விளக்குகள் நிரந்தரமாக எரிந்து கொண்டிருக்கும் வகையில் எண்ணெய், நெய்க்கு வேண்டிய செலவுக்குப் போதுமான நிதியையும் ஒதுக்கி வழிவகுத்துள்ளனர். அத்தகைய பக்த சிரோமணிகளின் ஆதர

வில் நடைபெறும் இத்தொண்டில் எளியேனும் பங்கு கொள்ளும் வாய்ப்புக் கிட்டியதை ஒரு பெரும் பேருகவே கருதுகின்றேன்.

இவ்விரு தாபனத்தாரும் காசி விஸ்வநாதர் ஆலயத்தில் அமைத்திருக்கும் வெள்ளி விளக்குக்கு ஆண்டுதோறும் உபயோகிக்க வேண்டிய நெய்க்காகக் கொடுக்கும் (ரூ. 730/-) தொகையிலியிருந்து ஸ்ரீ காசி மடத்தின் மூலம் நெய்வாங்கி விளக்குக்கு உபயோகப்படுத்தும் வகையில் சென்னை அபீஷியல் டிரஸ்டியிடம் ஒப்புவித்துள்ளனர். இந்தக் கைங்கரியம் நிரந்தரமாகக் காசியில் நடைபெறுவதற்கு உதவியாக ஸ்ரீ காசி மடத்தின் மூலமே இந்த நெய் நாள்தோறும்விளக்கில்சேர்க்கப்படுவதற்கான ஏற்பாட்டுக்கு இசைந்தருளி, எக்காலத்திலும் காசியில் இப்பணி நன்கு நடைபெற ஒப்புக்கொண்ட ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் பெருங்கருணைத்திறத்துக்குஎவ்வளவு நன்றி தெரிவித்தாலும் போதாது.

ஸ்ரீ கேதாரீஸ்வரர் ஆலயத்தில் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களே இவர்களின் வெள்ளி விளக்குகளை ஏற்றி வைத்தனர். இக்காரணங்களாலேயே ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களுக்கு இவர்கள்பால் அன்பும் ஆர்வமும் பெருகியது. எனவே, இப்பணியைச் சுவாமிகள் இவர்களிடம் மனமுவந்து ஒப்புவித்துள்ளனர்.

என்னை இப் பணியில் ஈடுபடுத்திய மற்ருெரு முக்கிய காரணம் இத்தகைய நூலை வெளியிடும்படி தூண்டிய காசி மடத் தலைவர் தவத்திரு. அருணந்தித் தம்பிரான் சுவாமிகளிடம் யான் கொண்டுள்ள பேரன்பும் பெருமதிப்பும் ஆகும். அப் பெருத்தகையார் வயது அறுபதாண்டுக்கு மற்பட்ட பின்புறம் தொடர்ந்து ஆண்டுதோறும் கேதார

யாத்திரை செய்து வருகின்றனர். கோலத்தாலும் சீலத்தாலும் சிறந்த சுவாமிகள் காசி மட நிர்வாகப் பொறுப்பேற்ற சில ஆண்டுகளில் இதுவரை ஒரு கோடி ரூபாய் வரை மூலதனம் நிறுவி அதன் வருமானத்திலிருந்து பல்வேறு அறப் பணிகள் நிரந்தரமாக நடைபெறும் வகையில் அமைத்துள்ள அரும்பெரும் சாதனைகளைப் பெரிதும் பாராட்டி வரும் அடியேன் அன்னாரின் அன்புக் கட்டளையை மறுக்க முடியவில்லை. அத்தவ முனிவர் இந்நூலைப் பார்வையிட்டு ஆதரவளித்துள்ளனர் என்பதை யறிந்து அதுவும் என் பாக்கியமென்றே கருதுகின்றேன்.

சென்னை மாநில அறநிலையப் பாதுகாப்புத்துறை முன்னைய ஆணையராக அரும்பணிகளாற்றிவந்த திரு. சாரங்கபாணி முதலியாரவர்கள் அன்பு கூர்ந்து வழங்கியுள்ள அரிய மதிப்புரையில் என்பால் அவர் கொண்டுள்ள பேரன்பினுலும் சிறிய பணிகளையும் பெரியனவாகக் கருதும் தம் நற் பண்பினுலும் என்னை அளவுக்கு மீறிப் புகழ்ந்துள்ளனர். அன்னுருக்கு என் உளங்கலந்த நன்றியைத் தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளேன்.

இறுதியாக இப்பணியில் எனக்கு எல்லாவித உதவிகளையும் உவந்தளித்த தேவஸ்தானத்தாருக்கும் நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலைப் படித்துப் பயன்பெறும் மக்களனைவரும் ஸ்ரீ பர்வதவர்த்தனி சமேத ஸ்ரீ இராமநாத சுவாமியின் பரிபூரண கிருபையைப் பெற்று உய்ய வேண்டுமாய் அவனிணையடிகளை இறைஞ்சுகின்றேன்.

A. உத்தண்டராமன்

## 27—1—1897 அன்று ஸ்ரீ சுவாமி விவேகானந்தர் இராமேஸ்வரம் கோவிலில் செய்த சொற்பொழிவின் தமிழாக்கம்

# உண்மையான வழிபாடு

அன்பே சமயம். தூய உள்ளன்பிலன்றிப் புறச் சடங்குகளில் சமயம் நிலைப்பதில்லை. உடற் சுத்தமும், உள்ளத் தூய்மையுமின்றிச் சிவபெருமானை வழிபடுதலில் பயனில்லை. சுத்தமான உடலுடனும், தூய்மையான உள்ளத்தோடும் சிவபெருமானை வழிபடுவோருடைய பிரார்த்தனைகளே செவிசாய்க்கப் பெறும். தூய்மையற்ற வரும் பிறருக்குச் சமய போதனை செய்ய முயலுகின்றனர். ஆனால், இறுதியில் அவர்கள் முயற்சி தோல்வியுறும். புற வழிபாடு என்பது உள்ளங்கனிந்த பக்தியின் ஒரு சின்னமே யாகும். ஆனால் பக்தியும், தூய்மையுமே உண்மையில் வேண்டுவன. அவை யிரண்டுமின்றிச் செய்யும் புற வழி பாட்டினால் பயனில்லை. ஆகையால் இந்த உண்மையை நீங்கள் யாவரும் நினைவில் வைத்துக்கொள்ள முயல வேண்டும்.

மனத் தூய்மையின்றி ஒருவன் கோவிலுக்குள் சென்றால், அவன் ஏற்கெனவே செய்துள்ள பாவங்களோடு மற்றொரு பாவத்தையும் செய்தவனாகிறான். ஆகவே அவன் தன் வீட்டைவிட்டுக் கோவிலுக்குப் புறப்படும் பொழுது இருந்ததைவிட இன்னும் இழிந்த நிலையில்தான் ஆலயததி னின்றும் வீட்டிற்குத் திரும்புகிறான். தீர்த்தமாடும் க்ஷேத் திரத்தில் அனேக புனித வஸ்துக்களும் பரிசுத்தமான

மக்களும் உறைகின்றனர். சாதாரணமான ஓர் இடத்தில் புரிகிற பாவத்தை எளிதில் போக்கிக் கொள்ள முடியும். ஆனால், தீர்த்தஸ்தலம் ஆகிய புனித க்ஷேத்திரத்தில் புரியும் பாவத்தைப் போக்க வழியேதுமில்லை.

எல்லாவித வழிபாட்டின் சாரமாவது, தூய உள்ளத்துடன் பிறருக்கு நன்மை புரிவதுதான். ஏழை எளிய மக்கள், நோயுற்ற மக்கள் இவர்களிலே சிவத்தைக் காண்பதுதான் உண்மையான சிவ வழிபாடு. விக்ரஹங்களில் மட்டும் சிவனைக்காண முயலுவது வழிபாட்டின் பூர்வாங்கமே யாகும். கோவிலில் மட்டும் சிவத்தைக்காண விழைகிறவனைக் காட்டிலும் ஜாதி, மதம், மற்ற யாதொரு பேதமுமின்றி ஓர் ஏழை மனிதனிடம் கடவுளைக் கண்டு அவனுக்குச் சேவை செய்து உதவி புரிகின்றவன்தான் சிவபெருமானின் இன்னருளுக்குப் பாத்திரமாகிறான்.

சிவபெருமானுக்குச் சேவை செய்ய விரும்புகிறவன் அவனுடைய படைப்புகளாகிய உலகத்தில் உள்ள எல்லா ஜீவராசிகளுக்கும் சேவை செய்ய முற்பட வேண்டும். சிவனடியார்களுக்குச் செய்யும் சேவை தான் சிவபெருமானுக்குச் செய்யும் சிறந்த சேவையென சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆதலால் இந்த உண்மையை நீங்கள் தெளிவாய் உணர வேண்டும்.

மீண்டும் நான் உங்களுக்குக் கூறுவதாவது: உங்களை நாடி வரும் எவருக்கும் உங்கள் சக்திக்கு இயன்றவரை தூய உள்ளத்துடன் உதவிபுரிய வேண்டும். இந்தக் குணத்தில்தான் உங்கள் உள்ளம் தூய்மை யடைந்து "சித்த சுத்தி" அடையமுடியும். அப்பொழுது நம்மிடத்தி லுறையும் சிவபெருமான் எங்கும் நீக்கமற நிறைந்தவரா வார். அவர் எப்பொழுதும் யாவருடைய உள்ளத்திலும் குடி

கொண்டுள்ளார். சுயநலமின்மையே உண்மையான சமயப் பற்றுக்குச் சான்று. ஒருவன் எவ்வளவுக்குத் தன்னல மின்றிப் பிறருக்கென வாழ்கின்றுனே, அந்த அளவுக்கு அவன் ஆன்மீகஞானம் பெற்றுச் சிவபெருமான் அருகே இருக்கக் கடவன். அவன்தான் படித்தவனுயினும், பாமரனு யினும் அறிந்தோ அறியாமலோ மற்ற எவரைக் காட்டிலும், சிவபெருமான் பக்கலிலே இருக்க அருகதை யுள்ளவனு கிருன். அப்படியின்றி ஒருவன் சுயநலம் மிக்கவனுயிருப் பின் அவன் எல்லாக் கோவிலுக்கும் சென்று க்ஷேத்ராடனம் செய்திருப்பினும், சிறுத்தையுடல் போலத் தன்னுடம்பு எல்லாம் நீறு பூசித் திலகம் தீட்டித் திரியினும், அவன் சிவபெருமானை விட்டு வெகு தூரம் விலகியுள்ளவனே யாகிருன்.

**[ஸ்ரீ சுவாமி விவேகானந்தரின் ஞாபகார்த்தமாய் இதனைக் கல்லில் வடித்து, இராமேசுவரம் குணகோபுர வாசலில் அவர் உபன்யாஸம் செய்த இடத்தில் பதிக்கப் பெற்றுள்ளது.]**

## கோவிலைத் தரிசித்தவர்களின் கருத்துக்கள்

(a) யாத்திரைகளை மேற்கொள்ளுவது தேசத்தின் பூகோள அறிவைப் பெற மிகவும் உபயோகமான சாதனமாகும். இதன்மூலம் மக்கள் ஒரு தேசத்தைப் பற்றி, அது பூகோள இயல் கொண்ட வெறும் பூமி மட்டுமல்ல; ஓர் முனையிலிருந்து மறு முனை வரை ஜீவன் நிறைந்த பலம் பொருந்திய மக்கள் சமூகம் என்பதை அறிய மிகவும் பயன்படும். புனித இடங்களுக்கு யாத்திரை மேற்கொள்ளும் வழக்கம் நம் நாட்டில் எல்லா வயது மக்களிடையேயும் தொன்று தொட்டு காலமாக இருந்துவரும் ஒரு தேசீய காரியமாகும். ரயில் போன்ற போக்குவரத்துச் சாதனங்கள் இல்லாத பழங்காலத்தில், இவ்வாறுன யாத்திரைகள் தான் நாட்டின் பல நற்பணி இயக்கங்களை ஓர் இடத்திலிருந்து மற்ரூர் இடத்துக்குப் பரப்ப உதவும் சாதனமாயிருந்தன. இதில் ஏற்றத்தாழ்வு, தனித்தனி ராஜ்ய உணர்ச்சி முதலியவற்றுக்கு இடமே இருந்ததில்லை.

—ராதா குமுத முகர்ஜி.

(b) இந்தியாவில் தேசீய ஐக்கியத்துக்கு அடிப்படையாயிருந்தது ஹிந்து மதம் தான். ஹிந்து மதம் நாடு முழுவதிலுமுள்ள ஹிந்துக்களை, அவா எம்மொழி பேசுபவராயினும், எந்த மாகாணத்தைச் சேர்ந்தவராயினும் ஒரே ஹிந்து என்ற இனத்தவராக இணைத்து வந்துள்ளது.

—நபகோபால் மித்ரா.

1. தற்கால இந்தியாவை அதன் மிகப் பழைய காலத்தோடு இணைத்துக்காட்டும் ஜீவன் பொருந்திய சங்கிலி போன்ற பெருமை வாய்ந்த கோயில்களில் இதுவும் ஒன்ருகும். இந்தக் கோயில் தன் பழைய புனிதமாகும் பழக்கவழக்கங்களைச் சற்றும் விட்டுக் கொடுக்காமலே, புதிய காலத்து வசதிகளையும் பயன் படுத்திக் கொள்ளுவது மிகவும் போற்றத்தக்கது.

—எஸ். வி. ராமமூர்த்தி. I.C.S.

2. இந்தியா முழுவதையும் காணும் பொருட்டு வெகுதூரம் யாத்திரை செய்பவர்களுக்கு இராமேசு வரம் நல்ல விவரம் அளிப்பதாயிருக்கிறது. விரிவான முறையில் மேற்கொள்ளப்படும் இந்திய யாத்திரைகளி லெல்லாம் இராமேசுவர யாத்திரையும் கட்டாயம் சேர்க்கப்பட வேண்டும்.

—திருமதி விலியம் ஹெச்மூர், நியூயார்க்

3. பழமையான சரித்திரப் புகழ் வாய்ந்த ஒரு கோயிலைப் பார்க்கவே நாம் ஆவலோடு சென்ருேம். ஆனல், இங்கு எதிர்பார்த்ததற்குமேல் மிக அதிக மாகவே காணக்கிடைத்தது.

—சி. இ. ஜோன்ஸ், I.C.S.

4. மிக அருமையான அநுபவம்...வியக்கத்தக்க பெருமை வாய்ந்த கோயில்...கட்டடக் கலைத்திறமை

யில் இதன் நீண்ட தூண் வரிசைகள் மற்ற எல்லா ஹிந்துக் கோயில்களையும்விட என்னை அதிகம் கவர்ந்தன.

—வில்லியம் ஹீத்கோட்.

5. மேல் தளத்திலிருந்து கோயிலின் உட்புறம் முழுவதையும் கோயிலின் கோபுரம் வரை காண்பது தான் இதுவரை பார்த்த எந்தக் கோயிலிலும் காணக் கிடைக்காத ஒரு காட்சியாகும்.

—பிராங்களீன் எட்கர்டன், யூ.எஸ்.ஏ.

6. சர்வ தீர்த்தத்திலும் கோடி தீர்த்தத்திலும் நீராடியவுடன் சரீரத்தில் மின்சாரம் போன்ற ஒரு சுறு சுறுப்பான உணர்ச்சி தோன்றுகிறது.

—ஒரு சர்ஜன்.

7. இது ஒரு மிக உன்னதமான கோயில்......... இந்துக்களின் கட்டடக்கலைத்தேர்ச்சிகள் ஒரு வியக்கத் தக்க எடுத்துக்காட்டு.

—தேஜ் பகதூர் சாஸ்திரி.

8. இந்தக் கோயிலில் பிரகாரங்களின் உள்ளே மனத்திற்கு அமைதி அளிக்கக்கூடிய ஒரு சூழ்நிலை நிலவுகிறது. சிறந்த சிற்ப வேலைகளைத் தாங்கி நிற்கும் கல் தூண் வரிசைகள் கண்களுக்கு இனிய விருந்தாகும். 'மனத்திற்கு நிம்மதியும் அமைதியான கடவுள் வழிபாடும் வேண்டுவோர் இராமேசுவரத்திற்கு வரவும்' என்பதே இந்தப் புகழ்வாய்ந்த கோயில் நமக்கு விடுக்கும் வேண்டுகோள் எனத் தோன்றுகிறது.

—எம். வி. வெள்ளோடி.

9. இந்தக் கோயிலின் வனப்புவாய்ந்த அமைப்பும் இதன் தொன்றுதொட்டு வரும் பழக்க வழக்கங்களும் என்னை மிகவும் கவர்ந்தன.

—எஸ். ராதாகிருஷ்ணன்.

10. இதன் தூய்மைக்கும் இதன் வனப்புக்கும் ஈடான கோயில்கள் இந்தியாவில் மிகக் குறைவாகவே உள்ளன....இந்தக் கோயிலின் காரியங்கள் யாவற்றையும் ஒவ்வொரு இந்தியனும் தாராளமும் தார்மீகமும் நிறைந்த உணர்வோடு நோக்க வேண்டியது அவசியம். இந்து மதத்தினருக்கு இது ஒரு மிகப்பெரிய தேசீய சொத்தாகும்.

—லக்ஷ்மீ காந்த்

11. இந்தப் பெருமை வாய்ந்த கோயில் இந்துக்களுக்கு ஒரு மிகப்பெரிய தேசீய சொத்தாகும்.

—போத்ராம் துபே.

12. இந்தக் கோயில் மகோன்னதமான தொழுகை ஸ்தலங்களில் ஒன்றாகும். இதன் கட்டிடக் கலை மிகவும் நேர்த்தியானதும் பெருமை வாய்ந்தது மாகும்.

—யாகூப் ஹஸன்.

13. இந்தக் கோயில் இந்தியாவின் ஒருமைப்பாட்டிற்கு ஒரு கண்கூடான சின்னமாகும். இது இந்தியாவின் வலிமை, வளர்ச்சி, திறமை இவற்றிற்கு எடுத்துக்காட்டாகும்.

—கே. எஸ். ராமசுவாமி சாஸ்திரி.

14. இந்தக் கோயில் மிகவும் புனிதமானது என்று வட இந்தியரும் ஏற்றுக்கொள்ளச் செய்ததன் மூலம் நம் முன்னோர்கள் தமது ஆழ்ந்த அறிவை வெளிப்படுத்தி யுள்ளனர். இதன் மூலம் அவர்கள் இந்தப் பரந்த நாட்டில் தார்மீக, கலாச்சார ஒற்றுமைக்கு வழிவகுத்துள்ளனர். இக்கோயிலின் பிரகாரங்களில் காஷ்மீரத்துப் பிராம்மணனும் யாழ்ப்பாணத்துத் தமிழனும் ஒருங்கே தோளோடு தோள் உராய்ந்து கொண்டு செல்வதைக் காண்கிறோம். தென்னிந்தியாவில் உள்ள மிக உயர்ந்த கோயில்களில் இதுவும் ஒன்றாகும்.

—வி. வி. சுப்ரமண்யன்.

15. இந்தக் கோயிலின் திறமை வாய்ந்த, திருப்தி யளிக்கக் கூடிய நிர்வாகத்தை நான் மனதாரப் புகழ்கிறேன்.

—சியாம்பிரசாத் முகர்ஜி.

16. கடவுளின் அடுத்த அவதாரத்தின்போது கூட இந்தக் கோயில் இதேமாதிரி வழி பாட்டிற்கு உரிய ஸ்தலமாக விளங்கி வரும் என்பதில் சற்றும் ஐயமில்லை.

—எல். எஸ். பார்த்தசாரதி.

17. இந்த ஆலயத்தின் பெருமையை உணர வேண்டுமானால் இங்கே நேரில் வந்துதான் காண வேண்டும். இதன் அமைப்பு மிகவும் உயர்ந்ததாக, வியப்பூட்டுவதாக இருக்கிறது.

—சுவரண் சிங்.

18. இந்தப் புனிதமான ஆலயம், இந்த நாட்டு மக்கள் எந்த மொழி பேசுபவராயினும் எந்த மாகாணத்தில் வசிப்பவராயினும் எல்லாரையும் ஒருங்கே சேர்க்கும் வலிமை வாய்ந்த சாதனமாகும்.

—பீம்சேன் சச்சார்.

19. இந்த ஆலயம் இந்தியா முழுவதிலுமுள்ள புனிதமான ஆலயங்களுள் ஒன்றாகும். வட இந்திய வாசிகளான எங்களை இது தனது வலிமை வாய்ந்த ஆத்மீகக் காந்தத்தினால் தென்னிந்தியாவுக்கு இழுக்கிறது. இராமபிரானே இங்குத் தன் கையால் லிங்கப் பிரதிஷ்டை செய்து பூஜை செய்தார் என்பதைக்கேட்க மயிர்க்கூச்சு ஏற்படுகிறது.

—கரண்சிங்.

20. இராமேசுவரம் பல்லாயிரக்கணக்கான மக்களுக்குப் பற்பல ஆண்டுகளாக நம்பிக்கை யூட்டும் ஸ்தலமாக இருந்துவருகிறது. இனியும் இதேமாதிரி இருந்துவரும்.

—எ. பி. பட்டானி.

21. இந்த ஆலயம் அமைந்துள்ள இடம், இந்த ஆலயம், இங்கு நிலவிவரும் வழிபாட்டு வழக்கங்கள் முதலியன யாவும்மனத்தில் மிகுந்த ஊக்கம் ஊட்டுவதாயிருக்கின்றன. இது நம் நாட்டின் தேசீய சொத்து. இதன் பெருமையைக் காப்பாற்றுவதுடன் நாமும் நம் வாழ்க்கையிலும் ஆத்மீகத் துறையிலும் மிகவும் உயர்ந்து நம் கலாச்சாரங்களைப் போற்றி வளர்க்க வேண்டும்.

—ஜி வி. மாவ்லங்க.

22. இந்த ஆலயத்தின் பரந்த அமைப்பும், வனப்பும் நம் கற்பனைக்குச் சற்றும் எட்டாத விஷய மாகும். இதைப் பார்க்கும்போது நாம் நமது முன்னோர்களின் முன்பு எத்தனை சிறியவர்கள் என்பது புலனாகிறது.

—எல். மிச்ரா.

23. இந்தப் பழமையான சரித்திரப் புகழ்வாழ்ந்த ஆலயத்தின் கம்பீரமான சிற்ப, கலைவேலைப்பாடுகளும், தனது வலிமை வாய்ந்த சூழ்நிலையும், நம் நாட்டின் வைதீக, ஆகம கலாச்சாரங்களைக் காக்கும் சின்னமாக விளங்குகின்றன.

—சுத்தானந்த பாரதியார்.

24. பாரத நாட்டில் பல மறக்க முடியாத சரித்திர நிகழ்ச்சிகளுடன் சம்பந்தப்பட்ட இந்தப் பெரிய யாத்திரை ஸ்தலத்துக்கு வர முடிந்தது பற்றி மகிழ்ச்சி யடைகிறேன். இந்தத் தலம் நமக்கு இராமபிரானின் நினைவை ஏற்படுத்துகிறது. பல நூற்றுக்கணக்கான பல்லாயிரக் கணக்கான ஜனங்கள் மனத்தில் உண்மை யான ஊக்கம் பெறும் பொருட்டு இங்கு வந்துள்ளனர். இனியும் வந்து கொண்டிருப்பார்கள்.

—லால்பஹதூர் சாஸ்திரி

25. இம்மாதிரியான ஆலயங்கள் நமது பெரிய நாட்டின் ஒற்றுமைக்கும், ஆன்மீக, சமூக, தார்மீக வளர்ச்சிக்கும் அடையாளமாக உள்ளன. நாட்டின் பல்வேறு பாகங்களிலிருந்து மக்கள் இங்கே ஒன்று-

சேரும்போது அவர்கள் தங்களுக்குள் பல்வேறு பொது விஷயங்களைப் பேசி, நாம் யாவரும் பிரிக்க முடியாத ஒரே இனத்தவர் என்பதை உணர்கின்றனர். தற்காலத்துப் புதுப் பழக்கங்கள் இந்தப் பழமையான ஆன்மீகப் பழக்க வழக்கங்களை எவ்வளவுதான் மாற்ற முயற்சித்தாலும், பாரத நாட்டில் ஆன்மீக ஒருமைப் பாடு குன்ருது நிற்க வேண்டும். அதைச் சற்றும் குன்ருது நிலை நிறுத்த வேண்டும். தற்கால இந்தியா வின் மக்களாகிய நாம் நம் முன்னோர்களின் அறிவையும், தூரதிருஷ்டியையும் கண்டு பெருமைப் பட வேண்டும். இம்மாதிரியான புனித யாத்திரை ஸ்தலங்கள் சுயநலவாதிகளால் சிருஷ்டிக்கப்பட்ட பொய்யான தடைகளைத் தகர்த்து விடுகின்றன.

—கந்துபாய் தேசாய்.

26. இந்தியாவின் கலாச்சார ஒருமைப்பாட்டிற்கு இது மற்ருெரு இணைப்புச் சங்கிலியாகத் திகழ்கிறது.

—பல்வந்த்ராய் மேத்தா.

27. இதனுடைய அமைப்பின் கம்பீரத்தையும் இதை நிர்மாணித்தவர்களுடைய கற்பனைத் திறனையும் கண்டு வியப்படைந்தேன்.

—ஸ்ரீ ஸ்ரீபிரகாசா.

28. வட இந்தியர்களுக்கு இராமேசுவரம் புனித மானதாக இருப்பதுபோல் வேறு எந்தத் தீர்த்தமும் இல்லை.

— ஸ்ரீ கிருஷ்ண சின்ஹா

29. இராமாயண மஹா காவியத்தில் இடம் பெற்றுள்ள இந்தத் தலமான எல்லா அழகையும் எல்லா தெய்வீக ஆனந்தத்தையும் ஒருங்கே தன்னுள் கொண்டுள்ளது. ஆதலால் இங்கு வரும் உண்மையான யாத்திரிகர்கள் எல்லாரும் தம் மனத்தில் புனிதமான தெய்வீகமான எண்ணங்கள் அடைவார்கள் என்பதிலும் ஐயமில்லை. இந்த இடம் மேன்மேலும் பெருமை பெற்று வருமாக.

—ஜயசாம ராஜேந்திர உடையார்.

30. நான் இங்கு வரும் ஒவ்வொரு தடவையும் மனத்தில் அமைதி பெற்று,மனத் தூய்மை அடைந்து மற்றொரு முறை இங்கு வரவேண்டும் என்ற எண்ணத்துடனேயே திரும்பிச் செல்கிறேன்.

—பி. ஸி. கங்குலி

31. இந்த ஆலயம் எண்ணற்ற ஆன்மீக உயர்வுக்கான அருள் கிரணங்களைப் பொழிகிறது. மனித குலம் முழுவதின் நலத்திற்காக இந்த ஆலயம் என்றென்றும் நிலைத்து நிற்க வேண்டும்.

—தலாய் லாமா.

32. மனக்கவலையும், துக்கமும், கலக்கமும் அடைந்துள்ள யாத்திரிகர்கள் இந்த ஆலயத்துக்கு வந்தால், மன ஆறுதலும் உள்ளத் தூய்மையும் அடைகின்றனர்.

—சுவாமி கேசவையாஜீ.

# இந்தத் தீவில் பார்க்க வேண்டியவை

## (அ) ஆலயத்தினுள்ளே

ஸ்ரீ விக்னேசுவரர்
,, ராமநாத சுவாமி
,, பர்வதவர்த்தனி
,, விசுவநாதர்
,, விசாலாட்சி
,, சேதுமாதவர்
,, ஜோதிர் லிங்கம்
,, சஹஸ்ர லிங்கம்
,, வஜ்ரேஸ்வரர்
,, நடராஜர் (மூன்று இடங்களில்)
,, பள்ளிகொண்ட பெருமாள்
,, ஆஞ்சநேயர்
,, அறுபத்து மூன்று நாயன்மார்கள்
,, சிவதுர்க்கா
,, மஹாலக்ஷ்மி

மற்ற தேவதைகள்.

இரண்டாவது பிரகாரம் திருப்பணி வேலை

**மூன்ருவது பிரகாரம்**

இராமலிங்கப் பிரதிஷ்டை
வாகனங்கள்

## (ஆ) வெளியே

அக்கினித் தீர்த்தமும் சங்கர மடமும்
லக்ஷ்மண தீர்த்தம்
இராம தீர்த்தம்
கந்தமாதன பர்வதம்
கோதண்டராமர் கோயில்
பாம்பன் பாலம்

# இராமேசுவரமும் தனுஷ்கோடியும்

## இராமேசுவரம்

இராமாயணம் எவ்வளவு பழமையானதோ அவ்வளவு பழமையானது இராமேசுவரம். இது, காசிக்கு நிகரான யாத்திரைத் தலமாக முக்கியத்துவம் பெற்றது. இராமேசுவரத்தில் வழிபாடும், மகோததியும் (வங்காள விரிகுடா,) இரத்திஞகரமும் (இந்துமா கடல்) கூடுமிடமான தனுஷ்கோடியில் (சேது) முழுக்கும் செய்தால்தான் காசி யாத்திரைப் பூர்த்தி யாகும். சேது என்ற வடமொழிச் சொல்லுக்குப் பாலம் என்று பொருள். இராமபிரான் இலங்கையை அடைவதற்காகக் கட்டிய அணையையே இது குறிக்கிறது. இராவணன் தம்பியும் இராமனின் நண்பனுமான விபீஷணனின் வேண்டுகோளுக் கிணங்கி இராமன் சேது அணையை வில் நுனியால் உடைத்தால் தனுஷ்கோடி என்ற பெயர் ஏற்பட்டது. (தனுஷ்-வில்; கோடி-முனை.) இராமன் தன் வில் முனையால் சேதுவுக்கு இடம் காட்டியமையால் இப்பெயர் உண்டாயிற்று என்றும் கூறுவர். இராமேசுவரம் கோயில் வழிபாட்டிற்கு முன்னும் பின்னும் இரண்டு கடல்கள் சங்கமமாகும் சேது தீர்த்தத்தில் முழுக வேண்டும் என்பது ஐதீகம். ஆனல், இப்போது இராமேசுவரத்துக்கு முதலில் போய் பிறகு தனுஷ்கோடிக்குச் செல்

கின்றூர்கள். இரு கடல்சங்கமத்தில் பிதுர்க்கடன் செய்தலும், அஸ்தி கரைத்தலும் வழக்கமாக நடக்கின்றன. பாறைகளும் சிறு தீவுகளும் தொடர்ந்து காணப்படுபவைப் பழம்பெரும் சேதுவின் எஞ்சிய பகுதிகள் என்று சொல்லப்படுகின்றன.

இராமேசுவரம் என்பது, இராமனுல் பிரதிஷ்டை செய்யப் பெற்ற ஈசுவரன் எழுந்தருளியுள்ள புனிதத் தலம் என்பதைக் குறிக்கிறது. மூலஸ்தான மூர்த்தியை இராமேசுவரர், இராமலிங்கர், இராமநாதர் என்று பல வாறுக அழைப்பர். இராவணனைக் கொன்ற பிரம ஹத்தி நீங்குவதற்காக முனிவர்களின் கருத்துக் கிசைந்து இராமன் சீதை, இலட்சுமணனுடன் சிவலிங் கத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டார் என்று புராணங்கள் கூறுகின்றன. (இராவணன் பிரம னுடைய பேரன் மகன் ஆனதால் பிராமணன்.) பிரதிஷ்டை செய்வதற்கு நல்ல வேளை குறித்து, கைலாசத்திலிருந்து லிங்கம் கொண்டு வரும்படியாக இராமன் அனுமானை அனுப்பியதாகவும், நெடுந் தொலைவிலுள்ள கைலாசத்திலிருந்து ஆஞ்சநேயர் லிங்கம் கொண்டு வருவதற்குக் காலம் தாழ்த்ததால், சீதை மணலால் செய்த லிங்கத்தை ஸ்தாபித்து வழிபட்டனர் என்றும் சொல்லப்படுகிறது. திரும்பி வந்த அனுமன் கோபம் கொண்டு மணலால் செய்யப் பெற்ற லிங்கத்தை அகற்ற முயன்றும் இயலவில்லை. அனுமனை ஆறுதல் செய்வதற்காக இராமலிங்கத்தின் பக்கத்தில் அனுமன் கொண்டுவந்த விசுவலிங்கத்தை ஸ்தாபித்து, அதற்கே பூசை முதலியன முதலில் செய்ய

வேண்டுமென்று இராமன் ஆணையிட்டார். இந்தியாவிலுள்ள பன்னிரண்டு ஜோதிர் லிங்கங்களுள் ஒன்று இராமலிங்கம். மற்றவை காசி, கேதாரம், சோமநாதம், உஜ்ஜயினி, ஓங்காரம் (நர்மதை), வைத்தியநாதம், பீமசங்கரம், நாகேசம், திரியம்பகம், (நாசிக்கு அருகிலுள்ளது) குசுமேசம், ஸ்ரீசைலம் இவற்றிலுள்ளவை. இராமேசுவரம் கோயிலில் விசாலாட்சி அம்பிகை சந்நிதிக்குப் பக்கமுள்ள ஜோதிர் லிங்கம் விபீஷணனால் நிலைபெறுத்தப் பெற்றது.

இராமேசுவரம் ஒரு தீவு. ஒரு குறுகிய கடல் பகுதியால் பெருநிலப் பகுதியினின்றும் பிரிக்கப் பெற்றிருக்கிறது. பாம்பன், மண்டபம் என்ற இரண்டு இரயில் நிலையங்களையும் இந்தக் கடல் பகுதியின்மேல் போடப்பட்டிருக்கும் இரயில் பாலம் இணைக்கிறது. பாம்பனிலிருந்து வடகிழக்கில் இராமேசுவரமும் தென்கிழக்கில் தனுஷ்கோடியும் உள்ளன. பாம்பனிலிருந்து தனுஷ்கோடி இரயில் பாதை அண்மையில் வீசிய கடும் புயலால் அழிக்கப்பட்டுவிட்டது. முன்பு இராமேசுவரத்திலிருந்து, தனுஷ்கோடிக்கு இரயில் பாதை போட்டிருந்தும் அது மண்மேடுகளால் மூடப்பட்டதால் அந்த இருப்புப் பாதை கைவிடப்பட்டது. இப்போது இராமேசுவரத்திலிருந்து தனுஷ்கோடிக்கு நடந்தும் படகுகள் மூலமும் கடற்கரையோரமாகச் செல்லலாம். இராமாவதாரம் எடுத்த விஷ்ணுவின் கைகளிலுள்ள இரண்டு ஆயுதங்களில் ஒன்றான சங்கு

போன்ற உருவத்தில் அமைந்திருக்கிறது இராமேசுவரம் தீவு.

## இராமநாதர் கோயில்

இராமேசுவரம் தீவில் மிகவும் முக்கியமானது இராமநாதசுவாமி கோயில். மீனவர்களைத் தவிர மற்ற பெரும்பாலான மக்கள் கோயில்களையும் யாத்திரிகர்களையுமே நம்பி வாழ்கின்றனர். தென் இந்தியாவிலுள்ள எல்லாப் பழைய கோயில்களிலுமுள்ளதுபோல் இராமநாதர் கோயிலுக்கும் உயர்ந்த மதிற் சுவர்கள் உள்ளன. கிழக்கு மேற்கில் 1.1/3 பர்லாங்கு (865 அடி) நீளமும், தெற்கு வடக்கில் 1 பர்லாங்கு (657 அடி) அகலமும் இருக்கின்றன. கிழக்கிலும் மேற்கிலும் பெரிய கோபுரங்களும், வடக்கிலும் தெற்கிலும் முற்றுப் பெறாத கோபுர வாயில்களும் உள்ளன. இந்தக் கோயிலில் மிகச் சிறந்த பகுதி அதன் நீண்ட பிரகாரங்களே. இரு புறங்களிலும் ஐந்தடி உயரமுள்ள மேடை மேல் தூண்கள் வரிசையின் நடுவே இப்பிரகாரங்கள் அமைந்துள்ளன. மூன்றாவது மேற்குப் பிரகாரமும் மேற்குக் கோபுர வாயிலிலிருந்து சேதுமாதவர் சந்நிதிக்குப் போகும்வழியில் கூடுமிடம் சொக்கட்டான் பலகைபோல் அமைந்திருப்பதால், அந்த இடத்திற்குச் சொக்கட்டான் மண்டபம் என்று பெயர். வசந்தோற்சவத்தில் இம்மண்டபத்தில் உற்சவமூர்த்திகள் அலங்கரிக்கப்பட்டு எழுந்தருளச் செய்யப்படும். இராமநாதபுரம் சேதுபதிகளால் ஆடி, மாசி மாதங்களில் ஆரும் நாள் திருவிழாக்களும் இங்குதான் நடத்தப் பெறு

கின்றன. மூன்றாவது வெளிப் பிரகாரம் உலகத்திலேயே மிக நீண்டது என்ற பெருமை பெற்றது. தெற்கு வடக்குப் பிரகாரங்கள் ஒவ்வொன்றும் 640 அடி நீளமும், கிழக்கு மேற்குப் பிரகாரங்கள் ஒவ்வொன்றும் 400 அடி நீளமும் உடைய, கிழக்கு மேற்கு உட்பிரகாரங்கள் ஒவ்வொன்றும் 244 அடி நீளமும், தெற்கு வடக்கு உட்பிரகாரங்கள் ஒவ்வொன்றும் 352 அடி நீளமும் உடையன. அவற்றின் அகலம் 15½ அடி முதல் 17 அடிவரை யுள்ளது. கோயிலின் முக்கிய சந்நிதியைச் சுற்றிலும் தனிப் பிரகாரங்கள் இருக்கின்றன. கிழக்கிலும் மேற்கிலும் உள்ளவை ஒவ்வொன்றும் 117 அடி நீளமும், தெற்கிலும் வடக்கிலும் உள்ளவை ஒவ்வொன்றும் 172 அடி நீளமும் உடையன. அவற்றின் அகலம் 14½ அடி முதல் 17 அடி வரையுமாகும். ஆகவே கோயிலிலுள்ள பிரகாரங்களின் மொத்த நீளம் 3850 அடி, வெளிப்பிரகாரத்தில் 1200 தூண்கள் இருக்கின்றன. அவற்றின் உயரம் தரையிலிருந்து மேல்தளம் வரை 30 அடி. இவையே கோயிலில் மிக அழகிய சிற்பச் சிறப்புடையவை; மிருதுவான கல்லால் கட்டப் பெற்றிருக்கின்றன. "இந்தக் கட்டடங்கள் உள்ளும் புறமும் எவ்விதமான புராதனக் கலையழகையும் விளைவிக்கவில்லை யென்பது அவற்றின் சிற்ப அமைப்பிலுள்ள குறைபாடாகும் எனினும் அவை உள்ளத்தே ஒரு கவர்ச்சியை எழுப்புகின்றன. எனக்குத் தெரிந்தவரையில் இந்த ஒரே கோயில்தான் உட்புற அழகுடையது. அதன் புராதனக் கலை அமைப்பைப் பற்றி இவ்வளவுதான் சொல்லக்கூடும்" என்று இராமநாதபுர மாவட்டக்கலெக்டராக

இருந்த டாட்டன் ஹாம் துரை கூறுகிறார். போக்கு வரத்துச் சாதனங்கள் எளிதாக இல்லாத அப்பழங் காலத்தே எப்படி அவ்வளவு கற்களைக் கொண்டு வந்து கட்டினார்கள் என்பதை நினைக்கும்போது நம்மை அதிசயத்தில் ஆழ்த்தி விடுகின்றது. "திராவிடச் சிற்பக் கலையமைப்பின் அழகெல்லாம் முழுமையும் காணக்கூடிய அதே சமயத்தில் குறைபாடுகளுமுடைய ஒரு கோயிலைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றால், அது நிச்சயமாக "இராமேசுவரம் கோயில்தான்" என்று பர்குசான் துரை எழுதுகிறார். பொதுவாக இக்கோயில் அமைப்பும் கட்டடக் கலையழகும் ஒருங்கே இணைந்தது என்பதாகவே யாத்திரிகர்கள் கருதுகின்றனர்.

## கோயில் வரலாறு

ஆதியில் கூரைக் கொட்டகையாக இருந்த இக் கோயில் ஒரு துறவியின் பாதுகாப்பில் இருந்தது. இப்போதுள்ள கோயில் பல நூற்றாண்டுகளில் பலரால் திருப்பணி செய்யப் பெற்ற கூட்டு அமைப்பேயாகும். இவர்களில் முதலிடம் பெறுவோர் இராமநாதபுரம் சேதுபதி மன்னர்களேயாவர். மூலலிங்கத்தையுடைய கர்ப்பக்கிரகத்தையும் அம்பிகைக் கோயிலையும் கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் இலங்கையரசன் பராக்கிரம பாகு என்பவன் கட்டினான் என்பதற்குரிய சான்றுகள் இருக்கின்றன. பதினைந்தாவது நூற்றாண்டில் இராம நாதபுரம் உடையான் சேதுபதியும், நாகப்பட்டினத்திற் கருகிலுள்ள நாகூரைச் சார்ந்த வைசியர் ஒருவரும் 78 அடி அயரமுள்ள கோபுரத்தையும் மதிற்சுவர்களை



ஸ்வாமி சன்னதி கிழக்கு கோபுரம்

யும் கட்டினர். மதுரையைச் சேர்ந்த செல்வரான அடியவர் ஒருவர் அம்பாள் கோயிற் பிரகாரத் திருப்பணியைச் செய்தார். பதினாரும் நூற்றாண்டில் கோயிலின் தெற்கு இரண்டாம் பிரகாரத்தைத் திருமலை சேதுபதி கட்டினார். அம்பாள் சந்நிதி வாயிலின் பக்கம் அவருடையவும் அவருடைய மகன் இரகுநாத சேதுபதியுடையவுமான உருவச் சிலைகள் உள்ளன. வெள்ளிக் கிழமைதோறும் இரவில் அவற்றுக்கு மாலை சூட்டிச் சிறப்பு செய்யப் பெறுகிறது. பின்னர் அதே நூற்றாண்டில் மதுரை மன்னர் விசுவநாத நாய்க்கரின் கீழ் குறுநில மன்னராக இருந்த சின்ன உடையான் சேதுபதி கட்டத் தேவர், நந்தி மண்டபத்துடன் சில திருப்பணிகளைச் செய்தார். 22 அடி நீளம், 12 அடி அகலம், 17 அடி உயரமுள்ள நந்தி, (செங்கற் சுண்ணாம்புச்) சுதையால் ஆக்கப் பெற்றது. பதினேழாம் நூற்றாண்டில் தளவாய் சேதுபதி யென்பவர் கிழக்குக் கோபுரத்தின் ஒரு பகுதியைக் கட்டினார். பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தே இரவி விஜயரகுநாத சேதுபதியென்பவர், பள்ளியறையையும் அம்பாள் சந்நிதி முன் மண்டபத்தையும் அமைத்தார். பின்னால் அதே நூற்றாண்டில் முத்துராமலிங்க சேதுபதி வெளிப் பிரகாரத்தைக் கட்டி முடித்தார். அவர், அவருடைய இரு அமைச்சர்கள்-இவர்களுடைய சிலைகள் கீழ்ப் பிரகாரத்தின் வடக்கு வாயிலின் பக்கம் காணப்படும்.

1897–க்கும் 1904–க்கும் இடையே தேவகோட்டை அள. அரு. குடும்பத்தினர் திருப்பணி நிதியிலிருந்து ஒன்பது நிலைகளையுடைய, 126 அடி உயரமான கிழக்குக் கோபுரத்தைக் கட்டி முடித்தனர். 1907,

1925 இவ்வாண்டுகளுக்கிடையில் அக்குடும்பத்தினரே கர்ப்பக்கிருகத்தைத் திருப்பணி செய்தும், சுண்ணும்புக் கற்களாலான பிரகாரத்தைக் கருங்கற்களினுல் அமைத்தும், வெளிச்சம் காற்று வசதி யுண்டாகும்படி செய்ததுடன், 27-2-1947-இல் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகமும் நடத்தினர். இரண்டாம் பிரகாரத் திருப்பணி இன்னும் முற்றுப்பெற வேண்டியிருக்கிறது. வடக்கு-தெற்கு வாயில் கோபுரங்கள் கட்டவேண்டியிருக்கின்றன. வெளிப்பிரகாரமும் ஆங்காங்கே பழுது பார்க்க வேண்டிய நிலையிலிருக்கிறது. பக்தர்கள் இந்த வாய்ப்பைக் கைவிடாமல் இயன்ற அளவு திருப்பணிக்கு நன்கொடையளித்து இறைவன் திருவருளுக்குப் பாத்திரமாக வேண்டும்.

## வழிபாடு

காலை 5 மணி முதல் இரவு 10 மணி வரை (பகல் 12-க்கு மேல் மாலை $4\frac{1}{2}$ மணிக்கும் தவிர) கோயில் திறந்திருக்கும். நாள்தோறும ஆறு கால பூசைகள் நிகழ்கின்றன.

காலை 5 மணி—திருவனந்தல் (அபிஷேகத்துடன்)
காலை 7 மணி—உதயகாலம்
காலை 9 மணி—காலசந்தி
பகல் 12 மணி—உச்சிக்காலம்
மாலை 6 மணி—சாயரட்சை
இரவு 9 மணி—அர்த்த ஜாமம்

பள்ளியறைக்குச் சுவாமியை எழுந்தருளப் பண்ணுவதும், அம்பாள் கோயிலிலுள்ள பள்ளியறையில்

சுவாமிக்கும் அம்பாளுக்கும் பூசையும் இரவு 9-30 மணிக்கு மேல் 10 மணிக்குள் நடைபெறும்.

குறித்தநேரத்தில் நடைபெறும் இந்த பூசைகளைத் தவிர, யாத்திரிகர்கள் தேவஸ்தான அலுவலகத்தில் பெற்ற சீட்டுகளுக்காக, அர்ச்சகர்கள் தனி வழிபாடு களும் செய்து வைப்பார்கள். பணம், தங்கம், வெள்ளி நகைகள், மற்ற மதிப்புள்ள பொருள்களைக் காணிக்கை செலுத்த யாத்திரிகர்கள் விரும்பினால், அவற்றைத் தேவஸ்தான பேஷ்காரிடம் கொடுக்க, அவர், இறைவன் இறைவி திருவடிகளில் அவற்றை வைத்து எடுக்க ஏற்பாடு செய்து, தேவஸ்தானக் கணக்கில் சேர்த்து, அவற்றிற்குரிய ரசீதுகளையும் கொடுப் பார்.

நிலங்கள் முதலிய சொத்துக்களைப் பக்தர்கள் கோயிலுக்குத் தானம் செய்ய விரும்பினால், கோயில் பொருளாளர் அல்லது நிர்வாக அதிகாரியுடன் தொடர்பு கொண்டு, தர்மகர்த்தக் குழு சட்ட நிபுணர் இவர்களின் அங்கீகாரம் பெற்று, பத்திரங்கள் எழுதிக் கொடுக்க ஏற்பாடுசெய்து கொள்ள வேண்டும். அபிஷேகத்திற்காகக் கங்கை தீர்த்தம், செம்பு, பித்தளை, வெண்கலத்திலான பாத்திரங்களில் கொண்டு வரப்பட வேண்டும். அந்தத் தீர்த்த பாத்திரங்களுக்குரிய கட்ட ணத்தைச் செலுத்தினால் பேஷ்கார் அவற்றைப் பெற் றுக் கொள்வார். தகரம், இரும்பினாலான பாத்திரங்கள் ஏற்றுக் கொள்ளப் படமாட்டா. ஆனால், அத்தகைய பாத்திரங்களில் தீர்த்தம் கொண்டு வருவோர் பித்தளை, செம்பு பாத்திரங்களைக் கோயிலில் விலை கொடுத்து

வாங்கினால், பேஷ்கார் கொண்டு வரப்பட்டது உண்மையான கங்கை தீர்த்தமா என்று தெரிந்து கொண்டு, அதை அந்தப் பாத்திரங்களுக்கு மாற்ற ஏற்பாடு செய்வார். பாத்திரத்திற்குரிய கட்டணத் தோடும், பெற்றுக் கொண்டதைத் தெரிவிக்க 15 காசுகளோடும், அஞ்சல் அல்லது இரயில் மூலமாக கங்கா தீர்த்தம் அனுப்பலாம். பாத்திரத்தின் விலை யோடு வீசம்படிக்கு ஒரு ரூபாயாக கங்கா தீர்த்தம் கோயிலிலும் வாங்கிக் கொள்ளலாம். ஒவ்வொரு முக்கியமான சந்நிதிக்கும் நுழைவாயிலில் பக்தர்கள் பணம் போடுவதற்காக உண்டியல் வைக்கப் பெற் றிருக்கிறது. அவ்வப்போது அதிகாரிகள், பொது மக்கள் முன்னிலையில் உண்டியல்கள் திறக்கப்பட்டு, அதிலுள்ள வருவாய் கோயில் கணக்கில் சேர்த்துக் கொள்ளப்பெறும்.

## அபிஷேகங்கள்

யாத்திரிகள் குறித்த கட்டணங்களை முன் கூட்டியே செலுத்திச் சீட்டுபெற்றுக்கொண்டால் கீழ்க் காணும் அபிஷேகங்கள் நடத்தி வைக்கப்பெறும்.

1. கலசாபிஷேகம் (1008, 108)
2. பிரசாதங்களுடன் உபயாபிஷேகம் (3 வகை கள்)
3. பிரசாதங்களுடன் பஞ்சாமிர்த அபிஷேகம். } தேவஸ்தானம் கங்கா தீர்த்தம் கொடுக்கும்
4. பிரசாதங்களுடன் உருத்திராபி ஷேகம். } தேவஸ்தானம் கங்கா தீர்த்தம் கொடுக்கும்
5. பிரசாதங்களுடன் கங்காபிஷேகம் (1008, 108).

அர்ச்சனைகள் அஷ்டோத்தரம் (108), திரிசதை (308), சகஸ்ரநாமம் (1008) என்ற மூன்று வகைகள் உண்டு. அபிஷேகங்கள், அர்ச்சனைகள், சேவைகள் முதலியவை பற்றிய விவரங்களைப் பிற்சேர்க்கையில் காணலாம். கட்டணங்களின் விவரங்களைக் கோயில் அதிகாரியிடம் தெரிந்து கொள்ளலாம்.

முன்கூட்டியே பணம் செலுத்தினால் பஞ்சமூர்த்தி உற்சவம், வெள்ளி ரதம் வீதி வலம் வருதல், தங்கப் பல்லக்கில் அம்பாளை முத்தங்கி, தங்கக் கவசம் சாத்தி எழுந்தருளச் செய்தல் முதலிய ஏற்பாடு செய்யப் பெறும். உற்சவம் முடிந்ததும் உபயதாரருக்கு மாலை மரியாதை செய்யப்படும். பிரார்த்தனை பூர்த்தி செய்ய பழம், தேங்காய் கொடுக்கவும், காவடி, முடி, விவாகம், தொட்டில் முதலியவற்றிற்காகத் தேவஸ்தான அலுவலகத்தில் கட்டணங்கள் தெரிந்து கொண்டு, முன்கூட்டிப் பணம் செலுத்திச் சீட்டுகள் பெறவேண்டும். யாத்திரிகர் முன்கூட்டியே கோயில் பொருளாளர் அல்லது நிர்வாக அதிகாரிக்குத் தெரிவித்து, உரிய கட்டணத்தொகையைச் செலுத்தினால், கோயிலிலுள்ள தங்க வெள்ளி வாகனங்கள், நகைகள் முதலியவற்றைப் பார்க்கலாம்.

## தீர்த்தங்கள்

கோயிலுக்குள் பல இடங்களில் 22 தீர்த்தங்கள் (பெரும்பாலும் கிணறுகள்) இருககின்றன. யாத்திரிகர்கள் தாங்களே கயிறும் பாத்திர மும கொண்டுவந்து தண்ணீர் இழுத்துக் குளிக்க வேண்டும். குளிதத நீர் கிணற்றுக்குள போகவிடக் கூடாது. குளிப்பதால்

உடலும் உள்ளமும் தூய்மையடையும்; தீர்த்தங்களில் மருந்துச் சத்துப் பொருள்களுடன் புனிதத் தன்மையும் கலந்திருக்கிறது.

## கோயிலுக்குள்ளே இருக்கும் தீர்த்தங்கள்

1. மகாலட்சுமி தீர்த்தம் (அனுமான் கோயில் தென்புறம்)
2. சாவித்திரி
3. காயத்திரி
4. சரசுவதி
   } தீர்த்தங்கள் அனுமான் கோயிலின் பின்புறமுள்ள தோட்டத்திலுள்ளவை.
5. மாதவ தீர்த்தம் (மேற்கு மூன்றும் பிரகாரம்).
6. கந்தமாதன
7. கலாக்ஷ
8. கலாய
9. நள
10. நீல
   } தீர்த்தங்கள் மேற்கு மூன்றும் பிரகாரத்திலுள்ள சேது மாதவர் கோயிலைச் சுற்றியுள்ளன.
11. சங்க
12. சங்கர
   } தீர்த்தங்கள் கிழக்கு இரண்டாம் பிரகாரத்திலிருக்கின்றன.
13. பிரமஹத்தி விமோசன
14. சூரிய
15. சந்திர
16. கங்கா
17. யமுனை
18. கயா
   } தீர்த்தக் கிணறுகள் வடக்கு இரண்டாம் பிரகாரத்தில் உள்ளன.
19. சிவ தீர்த்தம்—நந்தி மண்டபத்தருகில்.
20. சாத்தியாமிர்த தீர்த்தம்—நவசக்தி மண்டபம் பக்கம்.
21. சர்வ தீர்த்தம்—இராமநாதர் சந்நிதி உட்பிரகாரம்.

## இராமேசுவரம் கோயிலுள்ள சந்நிதிகளும் தீர்த்தங்களும்




(விபரங்கள் பின்புரம்)

## தீர்த்தங்கள்

—: o :—

1. மகாலக்ஷ்மி தீர்த்தம்
2. சாவித்திரி தீர்த்தம்
3. காயத்திரி தீர்த்தம்
4. சரசுவதி தீர்த்தம்
5. சேதுமாதவ தீர்த்தம்
6. கந்தமாதன தீர்த்தம்
7. கவாட்ச தீர்த்தம்
8. கவப தீர்த்தம்
9. நள தீர்த்தம்
10. நீல தீர்த்தம்
11. சங்கு தீர்த்தம்
12. சக்கர தீர்த்தம்
13. பிரமஹத்தி விமோசன தீர்த்தம்
14. சூரிய தீர்த்தம்
15. சந்திர தீர்த்தம்
16. கங்கா தீர்த்தம்
17. யமுனை தீர்த்தம்
18. கயா தீர்த்தம்
19. சிவ தீர்த்தம்
20. சாத்தியாமிருத தீர்த்தம்
21. சர்வ தீர்த்தம்
22. கோடி தீர்த்தம்

## சந்நிதிகள்

—: 0 :—

A இராமநாதசுவாமி சந்நிதி
B விசுவநாதர் சந்நிதி
C விசாலாட்சி சந்நிதி
D உற்சவமூர்த்தி
E அம்பாள் சந்நிதி
F பள்ளிகொண்ட பெருமாள் சந்நிதி
G சந்தான கணபதி சந்நிதி
H சுக்கிரவார சவுக்கை
I மகாகணபதி சந்நிதி
J முருகர் சந்நிதி
K கருவூலம்
L சேதுமாதவர் சந்நிதி
M இராமலிங்கப் பிரதிஷ்டை
N சபாபதி சந்நிதி
O ஆஞ்சநேயர் சந்நிதி
P அனுப்பு மண்டபம்
Q மகாலட்சுமி சந்நிதி
R கல்யாண மண்டபம்
S நந்தி

பகளும்


N
M
2,3,4
N
W
E
S
395-0×15=9
3rd CORRIDAR
11
10
O
P
Q
1
12
3rd CORRIDAR
395-0×15=9
R
REST HOUSE

22. கோடி தீர்த்தம் — விசாலாட்சியம்பிகை சந்நிதிக்கும் ஜோதிர் லிங்கத்துக்கும் நடுவில் இருக்கிறது.

இவைகளேயன்றி கோயிலுக்கு வெளியிலும் 21 தீர்த்தங்கள் இருக்கின்றன. அவை தேவிப்பட்டினம் (நவபாஷாணம்), திருப்புல்லாணி (தர்ப்பசயனம்), மண்டபம், பாம்பன், தங்கச்சிமடம், இராமேசுவரம் முதலிய இடங்களில் பரவலாக உள்ளன. அவை பழம்பெருமை யுடையனவாக இருந்த போதிலும், பெரும்பாலானவற்றிற்குச் செல்ல நல்லவழி இல்லாத தாலும், அவை நன்கு பாதுகாக்கப்படாததாலும் யாத்திரிகர்கள் அங்கெல்லாம் செல்வதில்லை.

### கோயிலுக்கு வெளியே உள்ள தீர்த்தங்கள்

1. சக்கர தீர்த்தம் என்ற தர்ம புஷ்கரணி—தேவிப் பட்டினம்.
2. சக்கர தீர்த்தம்—திருப்புல்லாணி
3. பாபவிநாச தீர்த்தம் — மண்டபம் இரயில் நிலையத்தருகில் வேதாளை என்ற இடத்தில் கடற்கரையிலுள்ளது.
4. கபி தீர்த்தம்—பாம்பனில் ஒரு திருக்குளம்.
5. மங்கல தீர்த்தம்
6. இரணவிமோசன தீர்த்தம்

(5, 6) — தங்கச்சி மடத்தில் ஏகாந்த ராமர் கோயிலுக் கருகில்.

7. அமிர்தவாவி தீர்த்தம்—ஏகாந்த ராமர் கோயிலுக்குள்.

8. சுக்கிரீவ தீர்த்தம்
9. ஜாம்பவ தீரத்தம்
10. அங்கத தீர்த்தம்
11. பாண்டவ தீர்த்தம் என்ற தர்ம தீர்த்தம்
12. பீம தீர்த்தம்
13. அர்ச்சுன தீர்த்தம்
14. நகுல தீர்த்தம்
15. சகாதேவ தீர்த்தம்

கந்தமாதன பர்வதத்துக்கு அருகிலிருப்பவை.

16. திரௌபதி தீர்த்தம்
17. பிரம தீர்த்தம்
18. பரசுராம தீர்த்தம்

பத்திர காளியம்மன் கோயிலுக்குப் பக்கமுள்ளவை.

19. அனுமகுண்ட தீர்த்தம்—இராமநாதர் கோயிலுக்கு வடக்கில்.
20. அகஸ்திய தீர்த்தம்—இராமநாதர் கோயிலுக்கு வடகிழக்கில்.
21. நாக தீர்த்தம்—இராம மந்திரத்துக்குள்ளே.
22. ஜட தீர்த்தம்—இராமநாதர் கோயிலுக்கு தெற்கில்.

## சேது

சேது தீர்த்தத்தில் நீராடுதலையும், இராமேசுவரம் கோயிலை வழிபடுதலையும் ஒவ்வொரு இந்துவும் தம் வாழ்நாளில் செய்ய வேண்டிய கடமையாகக் கருதுகிறார். சேது தீர்த்தத்தில் நீராடுதல் மிகப் புனிதமானதாகக் கருதப்படுகிறது. இந்தியாவில் மிகவும் தெய்வீகத் தன்மையுடையதாகக் கருதப்படும் கோயில்களில் ஒன்று இராமேசுவரம். இராமபிரான் தன் பட்டாபிஷேகத்திற்குப் பிறகும் இக்கோயிலுக்கு வந்து வழிபட்ட

தாகச் சொல்லப்படுகிறது. பஞ்சபாண்டவர்களும் பலராமரும் (கிருஷ்ண பகவானின் தமையனார்) புராண வரலாற்று முக்கியத்துவம் பெற்ற இந்தத் தலத்திற்கு வந்து வழிப்பட்டனராம். "இமசேது பரியந்தம்", "காசி இராமேசுவரம்" என்று சாதாரணமாக வழங்கும் பழமொழிகள் இராமேசுவரம், சேது இவற்றின் பெருமையைக் காட்டுகின்றன. இந்தியாவிலுள்ள இந்து ஆலயங்களில் வடக்கே பத்ரிநாதம், கிழக்கே பூரிஜகந்நாதம், மேற்கே துவாரகநாதம், தெற்கே இராமநாதம் இவை மிகவும் புகழ் பெற்றன. இராம நாதம் ஒன்றே சிவத்தலம். மற்ற மூன்றும் விஷ்ணு தலங்கள். இராமபிரான் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தார் என்றும், அவர் சீதையுடன் புஷ்ப விமானத்தில் இலங்கையிலிருந்து அயோத்திக்குச் செல்லும் போது இந்தத் தலத்தைக் காட்டினார் என்றும் இராமாயணம், சிவபுராணம், பத்மபுராணம் முதலியவற்றில் கூறப்பட்டிருக்கிறது. எவ்வாறாயினும் இராமர் இந்த லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தார் என்பதில் கருத்து வேற்றுமை இல்லை. சேது தீர்த்தத்தில் நீராடி, இராமேசுவரத்தை வழிபட்டால் மக்கட்பேறு கிடைக்கும் என்று இந்துக்கள் எல்லோரும் நம்புகின்றனர். இராமேசுவரத்திலுள்ள தங்கள் நிலங்களை எருதுகள் கொண்டு இப்போதும் உழுவதில்லை. மற்ற இடங்களில் இருப்பதுபோல் இங்கே எண்ணெய் ஆடும் செக்குகளும் இல்லை.

இராமநாதர் கோயிலுக்குள்ளிருக்கும் தீர்த்தங்களும், சந்நிதிகளும் இத்துடன் இணைக்கப்பட்டிருக்கும் படத்தில் காட்டப் பெற்றிருக்கின்றன. முக்கியமான

ஒவ்வொரு சந்நிதியைப் பற்றிய சுருக்கமான குறிப்புக்களைக் கீழே காணலாம்.

## இராமநாதசுவாமி சந்நிதி

இதுவே இராமநாதரின் மூலஸ்தானம். இங்குள்ள லிங்கம் சீதையால் ஆக்கப்பெற்று, இராமபிரானல் புனிதமாக்கப் பெற்றது. முன் மண்டபத்திலுள்ள கேடகம் ஒன்றில் இராமன், சீதை, அனுமன், சுக்கிரீவன் இவர்களுடைய விக்கிரகங்களைக் காணலாம். ஆஞ்சநேயர் இரண்டு கைகளிலும் லிங்கங்களுடனும், சுக்கிரீவன் தலை வணங்கி வாய் பொத்தி இராமனிடம் அனுமன் திரும்பி வந்ததைத் தெரிவிக்கும் பாவனையுடனும் இருக்கின்றனர். வாயில்களுக்கும் மேல் தளத்திற்கும் பயன்படுத்தப்பெற்றுள்ள கருங்கற்கள் மிகவும் சிறந்த வேலைப்பாடுடையவை. தூண்கள் பத்தியுள்ள முன் மண்டபம் மிகவும் அழகிய கவர்ச்சியுடையது.

மூன்று விமானங்களில் அனுமன், கந்தமாதன லிங்கம், அகஸ்திய லிங்கம் இந்தத் திருவுருவங்களைக் காணலாம்.

## விசுவநாதர் சந்நிதி

அனுமன் கொண்டுவந்த விசுவலிங்கம் எழுந்தருளியுள்ள சந்நிதி, இராமநாதர் சந்நிதிக்கு வடபுறம் இருக்கிறது. கோயிலின் முதல் பூசை இந்தச் சந்நிதியில்தான் தொடங்கும்.

## விசாலாட்சியம்பிகை சந்நிதி

விசுவநாதரின் தேவியாரான விசாலாட்சியம்மை எழுந்தருளியுள்ளார். இந்த அம்பிகைக்கும் விசுவநாதருடன் சேர்த்தே முதற் பூசை நடைபெறுகிறது.

## உற்சவ மூர்த்திகள்

மான் மழுவேந்திய இருகரங்களும், கூப்பிய இரு கரங்களும், தொடையில் வால் ஒட்டியும் உள்ள நந்தி கேசுவரர் விக்கிரகம் மிகவும் அற்புதமான சிற்ப வேலைப் பாடுடையது. அது அவசியம் பார்க்கத்தக்கது.

## பர்வதவர்த்தனி சந்நிதி

இராமநாதசுவாமியின் திருத்தேவியார் எழுந்தருளியுள்ளது. ஸ்ரீ ராமலிங்கரின் வலதுபுறம் தெற்கே யமைந்திருக்கிறது. மதுரையிலிருப்பதுபோல, சுவாமி சந்நிதிக்கு வலதுபக்கம் அம்பிகை சந்நிதியிருந்தால் மிகவும் மகத்துவம் உடையதாகப் பக்தர்கள் கருதுகின்றனர். இங்குள்ள ஸ்ரீ சக்கரம் அவசியம் பார்த்து வழிபடத்தக்கது.

## பள்ளியறை

இது, அம்பாள் கோயிலுக்குள் வடகிழக்கு மூலையிலிருக்கிறது. ஒவ்வோர் இரவும் இராமநாதர் சந்நிதியிலிருந்து இராமநாதர் தங்க விக்கிரகம் இங்கு எழுந்தருளப்பெற்று, பள்ளியறை ஊஞ்சலில் அம்பிகையின் தங்கத் திருவுருவத்தின் பக்கம் வைக்கப்பெற்று இரவில் சயன பூசை நிகழும். அதிகாலை அதே போன்று பூசை

நடத்தி இராமநாதரை மூலஸ்தானத்திற்கு எழுந்தருளச் செய்யப் பெறுகிறது. இந்தப் பூசைகள் தேவர்களும் விரும்பிக் காண வேண்டிய காட்சி. இரவில் அதிக நேரம் கண் விழித்தும், அதிகாலையில் எழுந்தும் பார்க்கத்தக்க இப்பூசைகள் பெறுதற்கரியபேறு என்றே சொல்ல வேண்டும்.

## பெருமாள் சந்நிதி

அம்பிகை கோயிலின் வடமேற்கு மூலையில் ஆகாயத்தை நோக்கும் திருமுக மண்டலத்துடன், பள்ளி கொண்ட பெருமாள் சேவை சாதிக்கிறார்.

## சந்தான கணபதி சந்நிதி

இது அம்பாள் கோயிலின் தென்மேற்கு மூலையில் அமைந்திருக்கிறது.

## சுக்கிரவார மண்டபம்

ஆதிலட்சுமி, சந்தானலட்சுமி, கஜலட்சுமி, தனலட்சுமி, தானிய லட்சுமி, ஜயலட்சுமி, ஈசுவர லட்சுமி, வீரலட்சுமி ஆகிய அஷ்டலட்சுமிகளின் திருவுருவங்கள் இந்த மண்டபத்தில் கிழக்கு நோக்கிக் காணப் பெறுகின்றன. மேலும், இம்மண்டபத்தின் வடபுறமுள்ள எட்டுத் தூண்களில் மனோன்மணி, மகேந்திரி, கௌமாரி, இராஜராஜேசுவரி, இலட்சுமி, காளி, சாமுண்டி, துவாரபாலிகை இவர்களின் திருவுருவங்கள் உள்ளன. தெற்குப் பக்கமுள்ள எட்டுத் தூண்களில் துவாரபாலிகை, சிவதுர்க்கை, மனோன்மணி, வாகீசுவரி, சேதுபதி கடம்பத்தேவர், பிரதானி, புவனேசுவரி,

அன்னபூரணி முதலிய திருவுருவங்கள் இருக்கின்றன.

## மகாகணபதி சந்நிதி

எப்போதும் கால பூசைகள் இந்தச் சந்நிதியில்தான் தொடங்கும்.

## சுப்பிரமணியர் சந்நிதி

தென்னாட்டில் கார்த்திகேயர் அல்லது சுப்பிரமணியர், வள்ளி தெய்வயானை சமேதராகவே வழிபடப் பெறுகிறார். ஆனால், வடநாட்டில் சில இடங்களிலிருந்து வரும் பெண்கள் முருகன் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பேரழகுடைய பிரம்மசாரி என்று எண்ணி வழிபடுவதில்லை. இந்தியப் பாராளுமன்றத்தின் முதல் சபாநாயகர் மாவலங்கர் இங்கு வந்தபோது, அவர் மனைவியாரை இந்தச் சந்நிதியில் வழிபடச் செய்தது பெரும்பாடாகிவிட்டது.

## கருவூலம்

இது, இரண்டாம் பிரகாரத்தின் வடமேற்கு மூலையில் இருக்கிறது. ஆயுதம் தாங்கிய போலீசார் இரவும் பகலும் காவல் புரிகின்றனர். விலைமதிக்க முடியாத நகைகள் ஆபரணங்கள், முதலியன இங்கு பாதுகாப்பாக வைக்கப்பெற்றுள்ளன. அவற்றைப் பார்வையிட விரும்பும் யாத்திரிகர்கள் முன்கூட்டியே அறிவித்து, உரிய கட்டணத்தைச் செலுத்தி ஏற்பாடு செய்து கொள்ளலாம்.

## சேதுமாதவர் சந்நிதி

இராமநாதர் சந்நிதிக்குப் பின்புறம் இரண்டாவது மூன்ருவது பிரகாரங்களுக்கிடையேயுள்ள இந்த சந்நிதியைப்பற்றி ஒரு கதை வழங்குகிறது. முன்ஞெரு காலத்தே மதுரையை யாண்ட புண்ணியநதி என்ற பாண்டிய மன்னன், சேதுவுக்கு யாத்திரையாக வந்து, கந்தமாதன பர்வதத்தில் தங்கி, இராமலிங்கரை வழிபட்டபின், விஷ்ணு பகவானைத் திருப்தி செய்வதற்காக ஒரு யாகம் செய்தான். அவனுடைய பக்தியைச் சோதிக்க எண்ணிய விஷ்ணு இலட்சுமியை ஓர் அநாதைச் சிறுமியாக அனுப்பிஞர். தனக்குப் பெண் மக்கள் இல்லாததால் அரசன் மனமிரங்கி அந்தச் சிறுமியைத் தன் பாதுகாப்பிற்கு எடுத்துக்கொண்டான். அரசனும் அரசி வித்தியாவதியும் அக்குழந்தையை நனகு பராமரித்து வந்தனர். ஒரு நாள் விஷ்ணு, கங்கைநீர் நிரப்பிய பாத்திரங்கள் தொங்கவிட்ட காவடியைத் தோளில் தாங்கியும், கரங்களில் குடை விசிறி யேந்தியும், விபூதி உருத்திராட்சம் அணிந்தும், ஒரு கிழப் பிராமண வடிவத்தில் வந்து இளவரசி யிருந்த நந்தவனத்தில் திருட்டுத்தனமாக நுழைந்து, அவள் கையைப் பிடித்து இழுத்தார். பணிப்பெண்கள் ஓடோடியும் சென்று இதை அரசனுக்கறிவித்தனர். மன்னனும் கிழப்பிராமணனைச் சங்கிலியால் பிணைத்து இராமேசுவரம் கோயிலுக்குள் ஓர் இடத்தில் சிறை வைக்கச் செய்தான். அன்றிரவு, கிழப்பிராமணன் விஷ்ணுவாகவும், தன் வளர்ப்புப்பெண் இலட்சுமியாகவும் தோன்றக் கனவு கண்டான். விழித்தெழுந்து இளவரசி யிருக்குமிடத்திற்குச் சென்ருன். அந்த

அறையிலும் அதே காட்சியைப் பார்த்தான். அடுத்த நாள் காலையில் இளவரசியை அழைத்துக்கொண்டு இராமேசுவரம் கோயிலுக்குப்போய், அங்கே விஷ்ணு சங்கிலியால் கட்டப் பெற்றிருப்பதைக் கண்டான். அரசன் தான் செய்த தவறையுணர்ந்து வருந்தினன். அரசன், விஷ்ணு இலட்சுமி இவர்கள் பேரில் வைத்த அன்பிற்கும் பக்திக்கும் அறிகுறியாக அந்தச் சங்கிலிகள் விளங்குகின்றன என்றும்; இலட்சுமிதேவி அருகிருக்கத்தான் எப்போது சங்கிலியுடன், (சேதுமாதவர் என்ற பெயருடன்) அதே இடத்தில் இருப்பதாகவும் சொல்லி அரசனுக்கு ஆறுதலளித்தார். வெண் சலவைக் கல்லால் செய்யப்பெற்றதால் அந்தத் திருவுருவத்தை சுவேத (வெண்மையான) மாதவர் என்றும் அழைக்கின்றனர். இந்தச் சந்நிதிக்கருகிலுள்ள சேது மாதவ தீர்த்தத்தில் மூழ்கி, அவரையும் இலட்சுமியையும் வழிபடுகிறவர்களுக்கு, சேது தீர்த்தத்தில் நீராடியதால் உண்டாகும் எல்லா நலன்களும் கிடைக்கும் என்றும், தனுஷ்கோடியிலிருந்து மணல் கொண்டு வந்து அவர் திருமுன் பூசை செய்கிறவர்களுக்குக் காசி யாத்திரை செய்த பயன் கிட்டும் என்றும் பகவான் அருள்பாலித்தார். ஆகவே, இராமேசுவரம் வைஷ்ணவர்களுக்கும் ஒரு சிறந்த யாத்திரைத் தலம்.

## இராமலிங்கப் பிரதிஷ்டை

புகழ்பெற்ற வெளிப்பிரகாரத்தின் வடமேற்கு மூலையில் இராமலிங்கப் பிரதிஷ்டை நிகழ்ச்சியைத் தத்ரூபமாகக் காட்சியளிக்கும் வகையில் கதையுருவங்கள் அமைக்கப் பெற்றிருக்கின்றன. இராமர்,

சீதை, இலக்குவர், இரண்டு கைகளிலும் லிங்கங்கள் ஏந்திய அனுமன், இராமர் பட்டாபிஷேகத்தில் கலந்து கொண்ட சுக்கிரீவன், விபீஷணன் முதலியவர்களின் உருவங்களைக் காணலாம். இது அவசியம் பார்க்கத் தகுந்தது. பார்வையாளர்களிடமிருந்து ஒரு சிறு தொகை கட்டணமாக வசூலிக்கப் பெறுகிறது.

## நடராஜர் சந்நிதி

உலகப் புகழ்பெற்ற வெளிப்பிரகாரத்தில் வட கிழக்கு மூலையில் நடராஜர் சந்நிதி அமைந்திருக்கிறது. இதனுள் மகாவிஷ்ணு உள்பட பல விக்கிரகங்கள் இருக்கின்றன. இங்குள்ள நடராஜ விக்கிரகங்கள் மற்றக்கோயில்களில் சாதாரணமாகக் காணப்படு வதைக் காட்டிலும் பெரியனவாக இருக்கின்றன. சுவாமி மூலஸ்தானத்தைச் சுற்றியுள்ள உட்பிரகாரத் தின் வடகிழக்கு மூலையில், இன்னும் இரண்டு நடராஜர் திருவுருவங்கள் உள்ளன. ஒன்றில், தலையின் இரு புறங்களிலும் சடைமுடி காணப்படவில்லை. கீழேயுள்ள முயலகன், மேல் நோக்கிய முகத்துடனும் கால்களைப் பின்புறம் நீட்டியும் காணப்படுகிறான்.

## ஆஞ்சநேயர் சந்நிதி

கோயிலின் கிழக்கு நோக்கிய பிரதான வாசலில் நுழையும்போது வலதுகைப்புறம் ஆஞ்சநேயர் சந்நிதி தெற்கு நோக்கியிருக்கிறது. அவர் திருவுருவத்தில் சிவப்பு வண்ணம் பூசப் பெற்றிருக்கிறது. வைஷ்ணவ பட்டர் ஒருவர் பூசை வழிபாடு செய்கிறார். சிவப்புச்

சந்தனம், தீர்த்தம், துளசிப் பிரசாதங்கள் இந்தச் சந்நிதியில் சாதிக்கப் பெறுகின்றன. ஆஞ்சநேயர் கைலாசத்திலிருந்து கொண்டுவந்த இரண்டாவது லிங்கம் இந்தக் கோயில் பிரகாரத்தில் இருக்கிறது.

## அனுப்பு மண்டபம்

இந்த மண்டபம் வெளிப் பிரகாரத்தைத் தாண்டி, கொடி மரம் நந்திமண்டபம் இவற்றிற்குப் போகிறதற்கு முன்னுல் பிரதான வாசலை ஒட்டியிருக்கிறது.

## மகாலட்சுமி சந்நிதி

அனுப்பு மண்டபத்திற்கு இடப்பக்கம் மகாலட்சுமி சந்நிதியிருக்கிறது.

## கல்யாண மண்டபம்

அம்மன் சந்நிதிக்கு முன்னு லிருக்கும் இந்த விசாலமான மண்டபத்தில் ஆடிமாதத்தில் (ஜுலை—ஆகஸ்டு) திருக்கல்யாண விழா கொண்டாடப் பெறும். சமயச் சொற்பொழிவுகளும், முக்கிய நிகழ்ச்சிகளும் இம்மண்டபத்தில்தான் நடைபெறும்.

## நந்தி மண்டபம்

நந்தி, செங்கல் சுண்ணும்பு கலந்த சுதையால் அமைக்கப்பெற்றது. உருவம் மிகப் பெரியது. நந்தியின் இருபுறங்களிலும் மதுரை மன்னர்களான விசுவநாத நாய்க்கர், கிருஷ்ணப்ப நாய்க்கர் இவர்களின் உருவங்கள் உள்ளன. நந்திக்குப் பின்புறம் கொடி மரம் இருக்கின்றது.

## கந்தமாதன பர்வதம் :

இராமேசுவரம் கோயிலுக்கு வடக்கே ஒன்றரை மைல் தொலைவில், மண்மேட்டில் மேல் தளமுடைய மண்டபம் இருக்கிறது. இவ்விடத்திற்குப் போவதற்கு நல்ல சாலை இருக்கிறது. கோயிலுள் இராமபாதங்கள் உள்ளன. இந்தக் கட்டடத்தின் உச்சியிலிருந்து பார்த்தால் நகரின் அழகிய தோற்றத்தையும் தீவின் சில பகுதிகளையும் காணலாம்.

## ஸ்ரீ கோதண்டராமர் கோயில்

இராமர் எழுந்தருளியுள்ள இந்த அழகிய கோயில், இராமேசுவரத்திலிருந்து ஐந்து மைல் தொலைவில் இருக்கிறது. அண்மையில் இருப்புப்பாதை அழிந்து போய்விட்டமையால், இக்கோயிலுக்கு யாத்திரிகர்கள் வண்டிகளிலும் நடந்துந்தான் செல்ல வேண்டும். விபீஷணன் சரணாகதி யடைந்ததும், இலக்குவரால் அவனுக்கு முதல் பட்டாபிஷேகம் நடத்தி வைத்ததும் இந்த இடத்தேதான் என்பர். இராமேசுவரத்தில் இராமலிங்கப் பிரதிஷ்டை விழா (ஜூன்—ஜூலையில்) நடைபெறும்போது, இராமேசுவரத்திலுள்ள இராமர் உற்சவமூர்த்தி, ஒரு தங்கக் கேடகத்தில் விபீஷண பட்டாபிஷேகத்திற்காக இங்கு எழுந்தருளச் செய்யப் பெறுகிறார். அதற்கு முன்னாள் இராமேசுவரம் கடைத் தெருவிலுள்ள திட்டக்குடி என்ற இடத்தில் இராவண வதம் நிகழும். பட்டாபிஷேகத்திற்கு மறுநாள் இராமேசுவரத்தில் இராமலிங்கப் பிரதிஷ்டை விழா நடைபெறும்.

## ஜடா தீர்த்தம்

பிறவி, மரணம், மூப்பு இவைகளால் ஆக்கிரமித்த வாழ்வில் ஈடுபட்ட புத்தியுள்ளவர்களுக்கு அஞ்ஞானத்தைப் போக்கடிப்பது ஜடா தீர்த்தத்தைத் தவிர வேறொன்றில்லை. உலகில் வீடு பேற்றை விரும்புகின்ற சிலர் சித்த சுத்தியையும் அடைய விரும்புகின்றவர்கள் சொல்லினால் வேதாந்தத்தைப் படிக்கிறார்கள். அவர்கள் மௌனத்தை அனுபவிப்பது இல்லை. பூர்வபட்சம் என்னும் பெரிய மகரங்களை உடையதும், சித்தாந்தம் என்னும் திமிங்கலங்களோடு கூடியதும், ஆன வேதாந்தம் என்னும் சமுத்திரத்தில் விழுந்தவர்கள் அஞ்ஞானத்தை அடைகின்றனர். முதலில் எவர்கள், சித்த சுத்தியின் பொருட்டு வேதாந்தத்தைப் படிக்கின்றனரோ, அவர்கள் படித்தபின், கலக்கமடைகின்றனர், கலகமும் செய்கின்றனர். சித்த சுத்தியானது, அதிக குழப்பம் உள்ள வேதாந்தத்திலிருந்து ஏற்படாது. ஆகையால், ஓ, முனீந்திரங்களே ; வேதாந்தத்தை நாங்கள் பெரிதாக எண்ணமாட்டோம். ஓ, தபிஸ்விகளே ; சிறிய உபாயத்தால், நீங்கள் சித்த சுத்தியை விரும்புவீர்களாயின், உங்களுக்கு அடித்துக் கூறுவேன். ஜடா தீர்த்தத்தைச் சேவியுங்கள் என்று, முன் ஒரு காலத்தில் எல்லாருடைய உபகாரத்திற்காக அறியாமையை நசிக்கச்செய்யும் இத்தத் தீர்த்தத்தைப் பரமசிவனார் கந்தமாதன பர்வத பகுதியில் நேரிடையாகவே நிர்மாணம் செய்தார். ராவணனைக் கொன்ற பிறகு, ஓ ; அத்தணர்களே, அறத்திற் வல்லோன் இராமன் ஜடையை எத்தண்ணீரில் கழுவினரோ, அதற்கு ஜடா தீர்த்தம் என்று பெயர் வழங்கப்படுகிறது.

கங்கையில் முழ்குதல், 64,000 வருடங்கள் செய்வதும், பிரகஸ்பதி சிம்மராசியில் புகும்போது, கோதாவரியில் ஒரு ஸ்நானம் செய்வதற்குச் சமம். அவ்விதம் பிரகஸ்பதி சிம்மத்தை அடையும் போது ஆயிரம் ஸ்நானங்கள் கோமதியில் வருடங்களால் கிடைக்கிறது. அது ஜடா தீர்த்தத்தைப் பார்ப்பதாலேயே கிடைக்கிறது. ஏ ; அந்தண சிரேஷ்டர்களே; ஜடா தீர்த்தத்தில் ஸ்நானம் செய்கின்ற மனிதர்களுக்கு சித்தசுத்தி உண்டாகிறது. பிறகு அறியாமை நாசமாகிறது. அஞ்ஞானம் அழிந்த பிறகு, ஞானம் உண்டாகிறது. அதனுல் வீடு பேற்றை அடைவார்கள். பிறகு அகண்ட சச்சிதாநந்த பூர்ணனுக ஆகிருன். இவ்விஷயத்தில், பழமையான இதிகாசங்கள் விளக்குகின்றன. தந்தையான வியாசருக்கும், புதல்வனுன சுகருக்கும் நடந்த சம்வாத ரூபமான மிகப் பழமையான இதிகாசம் உதாரணமாகச் சொல்லப்படு கிறது. முன்ஞெரு காலத்தில், முனி சிரேஷ்டரும், திருமாலின் அவதாரமானவரும், வழி வழி வந்த சிறப்பான அறிவை உடையவரும், எல்லா சாத்திரங் களின் பொருள்களை உணர்ந்தவரும் ஆன வியாச பகவானைத் தலையாரக் கும்பிட்டு சுகர் பின்வருமாறு கேட்டார்—சுகர் செல்கிருர்: பெருமை பொருந்திய எல்லாம் உணர்ந்த ஐயா, மிக உயர்ந்த இரகசி யத்தைச் சொல்லும் அந்தக் கரண சுத்தி உண்டாக வேண்டும். அவ்விதம் அஞ்ஞானமும் ஒழிய வேண்டும். அதனுல் ஞானேதயம் உண்டாக வேண்டும். முடிவில் உறுதியான அழிவில்லாத வீடு பேறும் உண்டாக வேண்டும். பெருமுனியே, என் நட்பினுல் அந்த உபாயத்தைச் சொல்ல வேண்டும். வேதாந்தங்களும்,

இதிகாசங்களும், புராணங்கள் முதலியவை முழுவதும் என்னுல் உம்மிடமிருந்து அறியப்பட்டன. ஆனுல் மனதைச் சுத்தி செய்யவில்லை. ஆகையால், எனக்கு, சித்த சுத்தி எவ்விதம் உண்டாகுமோ, அவ்விதம் சொல்ல வேண்டும். ஓ! முனி புங்கவர்களே! இவ்விதம் சுகரால் கேட்கப்பட்ட வியாச பகவான், இரகசியத்தைச் சொன்னுர்! எதனுல் அஞ்ஞானம் அழியுமோ; வியாச பகவான் சொன்னுர் :— சுகர், அஞ்ஞானம் என்னும் முடிச்சுகளை ஒழிக்கும் இரகசியத்தை உனக்குச் சொல்வேன். மனிதர்களுக்கும் புத்தியின் சுத்தத்தைக் கொடுப்பதும் பிறவி முதலிய பயத்தின் நாசத்தையும் சொல்வேன். இராமேசுவரத்தில் மிகப் புனிதமான கந்தமாதன பர்வதத்தில் பாபத்தை நீக்கும் ஜடா தீர்த்தம் என்னும் புகழ் பெற்ற தீர்த்தம் உள்ளது. எதில் திருமாலான இராமன் தான் தனது ஜடையைச் சுத்தம் செய்து கொண்டானே, தசரதனின் மகனுன பெருமை பொருந்திய இராமன் இத்தீர்த்தத்தின் பொருட்டு வரமளித்தான். அவை பின் வருமாறு :—

எவர்கள் இந்த மிகப் புனிதமான ஜடா தீர்த்தத்தை அடைந்து, அதில் ஸ்நானம் செய்கிறுர் களோ, அவர்களுக்கு மன சுத்தியும் உண்டாகும், வேள்வி யில்லாமலும், ஞானமில்லாமலும், ஜெபமில் லாமலும், உபவாசமில்லாமலும் ஸ்நான மாத்திரத்தில், ஜடா தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதால் மட்டும் 'புத்தி சுத்தி' மனிதர்களுக்கு உண்டாகிறது. ஜடா தீர்த் தத்தில் ஸ்நானம் செய்வதால், எல்லா தானங்களுக்குச் சமமான புண்யம் உண்டாகும். இந்த ஸ்நானம் செய் வதால் கடக்க முடியாததையும் கடக்கிறுன். புண்ணிய

லோகங்களையும் அடைகிருன். மங்களமான நீரை உடைய ஜடா தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதால், மிகப்பெருமையை அடைகிருன். ஜடா தீர்த்தத்தைத் தவிர வேருென்று 'மன சுத்திக்குக்' கிடையாது. இதைத் தவிர உயர்ந்த நியமமும் கிடையாது. ஜெபமும் கிடையாது. உயர்ந்த தெய்வமும் கிடையாது. எல்லா 'உலகங்களிலும் 'பேற்றை' அடைவதும், புகழைக் கொடுப்பதும், புனிதமானவைகளுள் புனிதமாகவும், இந்த ஜடா தீர்த்தம் மிகப் புகழடைந்துள்ளது. ஓ சுகனே ; இப்பொழுது எல்லா பாவத்தையும் போக் கடிப்பதும், மங்களங்களுக்குள் மங்களமாக, முன்பு 'பிருகு,வானர் தகப்பனை வருணனைக் குறித்து, புத்தித் தூய்மையைக் கொடுக்கும் உபாயமான மிகப் புனித மான நன்மையைக் கேட்டான். வருணன் அவன் பொருட்டு புத்தியின் சுத்தியைக் கொடுப்பதைச் சொன்னுன். வருணன் சொன்னுன் இராமேசுவரத்தில் புனிதமான 'கந்தமாதன பர்வதத்தின்' பகுதியிலுள்ள ஜடாதீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதால் மட்டும் புத்தி யின் சுத்தி உண்டாகிறது நிச்சயம் என்று, வருணனின் மகனை 'பிருகு, உடனே தகப்பனின் வார்த்தையால் ஜடா தீர்த்தத்தை அடைந்து, ஸ்நானம் செய்து, புத்தி சுத்தியை அடைந்தான். அப்பொழுது "பிருகு' நாசம் செய்த அஞ்ஞான கட்டத்தை உடையவனுய்க் கொண்டு, அந்த சுத்தினுல் உண்டான "அத்வைதம்' ஆகிய நல்ல அறிவை உடையவனுய்க் கொண்டு தன் தகப்பனைவருணனின் உலகத்திற்கும், 'அகண்ட சச்சி தானந்த பூர்ணுகரணுகவும்' ஆனுன். சிவபெருமானின் அம்சமான 'துர்வாசரும்' ஜடா தீர்த்தத்தில் குளித்துச்

சடுதியில் மனத் தூய்மையை அடைந்து பிரம்மானந்த ராக ஆனுர். விஷ்ணுவின் அம்சமான 'தத்தாதி ரேயரும்' இத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ததால், சுகா ! சுத்தமான மனதையுடையவஞக ஆகி, "பிரம்ம சொரூபமாக" ஆனுன். எவன் அஞ்ஞான நாசத்தை விரும்புகிருனே, அவன் மிகப் புனிதமான புண்ணிய மான ஜடா தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும். சுகா, ஆகையால் நல்ல புத்தி உடையவனே ; ஜடா தீர்த்தத்திற்குச் செல் ; மனத்தூய்மையைக் கொடுக்கக் கூடிய அதில் ஸ்நானம் செய். இவ்விதம் தகப்பனுன வியாசரால் சொல்லப்பட்டமகனுன சுகன், அப்பொழுது அந்தணர்களே ; இராமேசுவரத்தில் பெரும் புண்ணிய மான 'கந்தமாதன பர்வதத்தில் நல்ல சுத்தியைக் கொடுக்கும் ஜடா தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய விரும்புகின்றவஞகச் சென்ருன். சுக முனிவர் ஜடா தீர்த்தத்தில் சங்கல்பத்துடன் ஸ்நானம் செய்ய மனத் தூய்மையை அடைந்து, அதனுல் அறிவின்மையை நீக்கி, தன்னுடைய ஆத்தும வடிவமான பரமானந்த வடிவை அடைந்தார். மனத் தூய்மையை விரும்பு கின்ற அனைவரும், அந்தணர்களே' இந்த ஜடா தீர்த் தத்தில் பக்தியுடன் ஸ்நானம் செய்ய வேண்டும். காமதேனுவுக்குச் சமமான சுபமான ஜடா தீர்த்தம் இருக்கும் பொழுது, மக்கள் தாழ்ந்த, மற்றவைகளில், மோகித்துக் களிப்படைகிருர்களே, சுகத்தை விரும்பு கிறவன் சுகத்தை மட்டும் அடைகிருன். முக்தியை விரும்புகிறவன். முக்தியை அடைகிருன் இதில் ஸ்நானம் பன்னுகிறவன் மட்டும் உண்மையில் அவைகளை அடைகிருன் என்று என்ருல்

சொல்லப்பட்டது. வேதத்தின் வார்த்தைப்படி மனிதர்களுக்கு மனத்தூய்மையானது புண்ணியத்திஞலும், யாகத்திஞலும், தானத்திஞலும், தவத்திஞலும், விரதத்திஞலும், உபவாசத்திஞலும் ஜெபத்தாலும், யோகத்தாலும் உண்டாகும். ஓ அந்தணப் பெரியோர்களே ; இவைகள் இல்லாமல் மிகப் புனிதமான, ஜடா தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதால் மட்டும் அந்தணர்களுக்கு மனத்தூய்மை உண்டாகும் என்பது நிச்சயம். ஜடா தீர்த்தத்தின் மகிமையை என்ஞல் சொல்வதற்கு இயலாது. அத் தீர்த்தத்தைச் சிவபிரான் உணர்கிருர். திருமாலும் உணர்கிருர். பிரம்மனும் அவ்விதமே. ஜடா தீர்த்தத்திற்குச் சமமான தீர்த்தம் இருந்ததுமில்லை ; இருக்கப் போவதுமில்லை. எவன் ஜடா தீர்த்தத்தின் கரையில் க்ஷேத்திர பிண்டத்தைப் போடுகிருனே ; அவனுக்கு "கயா சிராத்தத்திற்கும்" சமமான புண்ணியத்தை அடைகிருன். இதில் சந்தேகம் வேண்டாம். ஜடா தீர்த்தத்தில் மனிதன் ஸ்நானம் செய்து, பாவத்திஞல் அழுக்கடைவதில்லை. தரித்திரத்தையும் அடைவதில்லை. நரகத்தையும் அடைவதில்லை. சூதர் சொல்லுகிருர் :— இவ்விதம், ஓ அந்தணர்களே ; ஜடா தீர்த்தத்தின் மகிமை உங்களுக்குச் சொல்லப்பட்டது. எதில் வியாசரின் மகனும், யோகியுமான 'சுகர், பாவத்தைப் போக்கி மனத் தூய்மையையும், "அத்வைத ஞான சாதனத்தையும்" அடைந்தாரோ ; எவன் இந்த அத்தியாயத்தை ஒருமித்த மனதுடன் படிக்கிருனே, அல்லது கேட்கிருனே அவன் பாவத்தை நீக்கி, வைகுண்ட பதவியை அடைகிருன் என்று காந்த மகாபுராணத்தில் எண்பத்

தோராயிரம் செய்யுள் மூன்றுவதான பிரும்ம கண்டத்தில் உள்ள 'சேது மகாத்மியத்தில்' ஜடா தீர்த்தப் புகழ்ச்சியில் சுகரின் 'சித்த சுத்தி' வரிவனம் என்ற இருபதாவது அத்தியாயம் முற்றும்.

இந்தப் புண்ய தீர்த்த ஸ்தலம், இராமேஸ்வரத்திலிருந்து தெற்கே 3 மைல் தொலைவில் உள்ளது.

## தனுஷ்கோடி ஸ்ரீ விநாயகர் கோயில்

தனுஷ்கோடியில், இராமேசுவரத்திற்குச் சம்பந்தப்பட்டது இந்த விநாயகர் கோயில் ஒன்றுதான். நாட்டாண்மைக்கழகத் தங்கும் விடுதி, வெங்கடராயர் சத்திரம், தஞ்சாவூர் அரசர் சத்திரம், இரயில் நிலைய உணவுச்சாலை முதலியவை கடும்புயல் வீசி அழிந்த காரணத்தால் பயனற்றுப் போயின. தனுஷ்கோடிக்குச் செல்லும் இருப்புப்பாதையும் அழிந்துபோய்விட்டது. இராமேசுவரத்திலிருந்து சேதுவுக்குப் படகுகள் மூலமும் போகலாம். இப்போது விநாயகர் திருவுருவங்கள் இராமேசுவரத்தில் இருக்கின்றன.

## திருவிழாக்கள்

திருவிழா விவரப்பட்டியல் ஒன்று பின் இணைப்பாக உள்ளது. மாசி மாதத்தில் (பிப்ரவரி-மார்ச்சு) மகா சிவராத்திரி. ஆனியில் (ஜுன்-ஜுலை) இராமலிங்கப் பிரதிஷ்டை. ஆடியில் (ஜுலை-ஆகஸ்டு) திருக்கல்யாணம். தைப் பூசத்தில் (ஜனவரி-பிப்ரவரி) கோயிலுக்கு மேற்கேயுள்ள இலட்சுமண தீர்த்தமான திருக்குளத்தில் இரவு தெப்பம். இவை கோயிலில்

நடைபெறும் முக்கியமான திருவிழாக்கள். பல ஆண்டு களுக்கு ஒரு முறை வரும் அர்த்தோதயம், மகோதயம் புண்ணிய காலத்தில், இராமேசுவரத்திலிருந்து பஞ்ச மூர்த்திகள் (விநாயகர், இராமநாதர், பர்வதவர்த்தனி, முருகன், சண்டேசுவரர்) தனுஷ்கோடிக்குத் தீர்த்தவாரி செய்வதற்காக எழுந்தருளச் செய்யப்பெறுவர்.

## தங்கும் விடுதிகள்

இராமேசுவரத்திலுள்ள தங்கும் விடுதிகளைக் காட்டும் பட்டியல் ஒன்று பிற்சேர்க்கையாக இருக் கிறது. கோயிலைச் சார்ந்த விடுதிகள் நல்ல முறையில் பாதுகாக்கப் பெற்றுவருகின்றன. கோயில் அலுவலர்கள், தங்குவதற்கும் வழிபாட்டிற்கும் யாத்தி ரிகர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வார்கள்.

இராமேசுவர வழிபாட்டிற்குப்பின் யாத்திரிகர்கள் திருப்புல்லாணி அல்லது தர்ப்பசயனத்துக்குப் (ஆதிசேது) போகவேண்டும். இது, இராமநாதபுரம் இரயில் நிலையத்திலிருந்து 7 மைல் தொலைவில் இருக் கிறது. ஆழ்வார்களால் பாடப்பெற்ற விஷ்ணு கோயில் ஒன்று அங்கிருக்கிறது. பாடல் பெற்ற சிவத்தலமான இராமேசுவரத்தைப்போல், திருப்புல்லாணியும் ஆழ்வார் களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற 108 திவ்விய தேசங்களில் ஒன்று. இந்த இடத்தில் இராமபிரான் தர்ப்பைப் புல்மேல் படுத்திருந்ததாகவும், கடலரசனை வருணன் வர காலம் தாழ்த்ததால் அவன் மேல் கோபம் கொண்டு அவன் கர்வத்தை அடக்கி, பின் அவன் உதவி கொண்டு சேது அணையைக் கட்டினார் என்றும்

சொல்லப்படுகிறது. இலங்கைமேல் போர் தொடுக்கக் கடலேக் காப்பதற்குமுன், இவ்விடத்தில் மற்றவர் களுடன் ஆலோசனே நடத்திஞர் என்றும் கருதப் படுகிறது.

## தேவிப்பட்டினம் அல்லது நவபாஷாணம்

இது ஒரு கடற்கரை ஊர். இங்கு நவக்கிரகங் களேக் குறிக்கும் ஒன்பது கற்களே இராமர் ஸ்தாபித் திருக்கிருர். இது இராமநாதபுரத்திலிருந்து 10 மைல் தொலேவில் இருக்கிறது. இவ்வூரில் தேவியினுடைய கோயில் ஒன்றும் உண்டு.

முதல் சேதுபதிக்கு இராமபிரான் முடிசூட்டும் போது, அவன் அமர்ந்திருந்த கல் வைக்கப்பெற்றுள்ள இராமநாதபுரம் இராமலிங்க விலாச மாளிகையைப் பார்த்தால்தான், இராமேசுவர - சேது யாத்திரை பூர்த்தியானதாகக் கருதப்படும். மிகப் பழங்காலம் தொட்டே சேதுபதிகள் இராமேசுவரத்துடன் தொடர் புடையவர்கள். பாண்டிய மன்னர்கள், கடற்கரைப் பகுதிகளின் முழு உரிமைகளேயும் சேதுபதிகளுக்கு அளித்தனர். சேதுபதிகளும் இராமநாதசுவாமியைத் தங்கள் குலதெய்வமாகப் போற்றி வந்துள்ளனர்.

## நிருவாகம்

இராமேசுவரம் கோயில் நிருவாகம் 1883-ஆம் ஆண்டு வரையில் தொடர்ந்து வேளாளத் துறவி களிடம் இருந்தது. அந்தப் பரம்பரை மறையவே மதுரை மாவட்ட நீதிபதி அந்த நிருவாகத்தை மேற்கொண்டு, ஒரு ரிசீவர் உதவியுடன் நடத்தி வந்தார். பின்னர் 1853-ஆம் ஆண்டு XX-ஆவது சட்டத்தின்படி கோயிலுக்கு மேற்பார்வையாளர்களேச் சிலகாலம் வரை நியமித்திருந்தார். கடைசியாக

1912-ல் இராமநாதபுரம் துணை நீதிபதி ஒரு திட்டம் வகுத்தார். அதன்படி ஐந்து ஆண்டுக் காலம் பதவி வகிக்கக்கூடிய ஐந்து பேர்களடங்கிய குழு ஒன்று அமைக்கப்பெற்றது. அதில் இராமநாதபுரம் சேதுபதியும், தேவகோட்டை அள. அரு. குடும்பத்தினர் ஒருவரும் இடம்பெற வகை செய்யப்பெற்றது. அந்தத் திட்டமும் மாற்றப் பெற்று, 1959-ஆம் ஆண்டு அறநிலையச் சட்டத்தின் கீழ் தர்மகர்த்தாக்குழு ஒன்றும், துணைக் கலெக்டர் பதவியிலுள்ள ஒரு நிருவாக அதிகாரியும் நியமிக்கப் பெற்றனர். கோயிலில் வேலை பார்க்கும் எவருக்கும், கோயில் உத்தியோகங்களிலோ, அல்லது வருவாயிலோ எவ்விதமான உரிமையும் கிடையாது.

## வருவாய்

நில சம்பந்தப்பட்ட சட்டங்களால் கோயிலின் வருவாய் மிகவும் பாதிக்கப்பட்டுவிட்டது. அரசாங்கம் கொடுக்கும் தஸ்திக், கோயிலுக்குச் சொந்தமான நிலங்களின் விளைபொருள்கள் பக்தர்களின் கட்டளைகள், காணிக்கைகள், யாத்திரிகர்கள் சேவைகளுக்காகச் செலுத்தும் கட்டணங்கள் இவைகளே இப்போது கோயிலுக்கு முக்கிய வருவாய் இனங்களாகும். சராசரி ஆண்டு வருமானமான ஐந்து லட்சம் ரூபாயைக் கொண்டு, கோயில் நிருவாகத்தைத் திருப்தியாய் நடத்தப் போதுமானதாக இல்லை.

**இதை உணரும் அன்பர்கள் மனமுவந்து அளிக்கும் நன்கொடைகளை, ஆலய நிருவாகிகள் அன்புடன் ஏற்றுக்கொள்வார்கள். அளித்தவர்கள் ஸ்ரீ பர்வதவர்த்தனி சமேத ஸ்ரீ ராமநாதர் திருவருட்குப் பாத்திரர் ஆவார்கள்.**

# பிற்சேர்க்கை

## அபிஷேகக் கட்டணங்கள்.

சுவாமிக்கும் அம்மைக்கும் அபிஷேகம் நடத்துவிக்க விரும்பும் அடியார்கள் கீழ்க்கண்ட கட்டண விகிதப்படி தமது விருப்பம்போல் பணம் செலுத்தி நடத்திவித்து மகிழலாம்.

## ஆலயத்தில் அபிஷேகம், அர்ச்சனைகள், உற்சவங்களுக்குரிய கட்டணங்கள்.

### அபிஷேகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1. | சகஸ்ர கலச அபிஷேகம் | ரூ. | 1000-00 |
| 2. | அஷ்டோத்திர கலச அபிஷேகம் | ரூ. | 250-00 |
| 3. | சங்காபிஷேகம் (1008 சங்குகள்) | ரூ. | 101-00 |
| | ஷை நெய்வேத்யம் | ரூ. | 5-00 |
| 4. | சங்காபிஷேகம் (108 சங்குகள்) | ரூ. | 25-00 |
| | ஷை நெய்வேத்யம் | ரூ. | 3-00 |
| 5. | ருத்ராபிஷேகம் | ரூ. | 101-00 |
| 6. | உபயாபிஷேகம் முதல் பிரிவு | ரூ. | 51-00 |
| 7. | ஷை இரண்டாம் பிரிவு | ரூ. | 25-00 |
| 8. | ஷை மூன்றும் பிரிவு | ரூ. | 15-00 |
| 9. | பால் அபிஷேகம் (பால் விலை உள்பட) | ரூ. | 3-00 |
| 10. | பன்னீர் அபிஷேகம் (பாட்டில் உள்பட) | ரூ. | 1-00 |
| 11. | ஸ்படிகலிங்க அபிஷேகம் தரிசனம் ஸ்ரீ சுவாமி சந்நிதி உள்பக்கம் (டிக்கட் 1க்கு 4 நபர்கள் அனுமதிப்படுவார்கள்) | ரூ. | 7-00 |
| 12. | ஸ்படிக லிங்க தரிசனம் நபர் 1க்கு | ரூ. | 2-00 |
| 13. | ஸ்படிக லிங்க தரிசனம் நபர் 1க்கு (கியூ வரிசையில் நின்று தரிசனம் செய்ய) | ரூ. | 1-00 |
| 14. | கெங்காபிஷேகம் செய்ய பாத்திரம் 1க்கு டிக்கட் | ரூ. | 3-50 |

15. கெங்காபிஷேகம் (கெங்கா ஜலம், பாத்திரம் டிக்கட் உள்பட) ரூ. 5-00
16. சர்க்கரை அபிஷேகம் செய்ய கட்டணம் ரூ. 3-00
17. தேன் ,, ,, ,, ரூ. 5-00
18. தயிர் ,, ,, ,, ரூ. 3-00
19. நெய் ,, ,, ,, ரூ. 5-00
20. சர்க்கரை, தேன், தயிர், நெய், பால் (மேற்கண்ட 5 அயிட்டங்களுக்கு அபிஷேகம் செய்ய கட்டணம் மட்டும் ரூ. 15-00

கீழ்க்கண்ட மூன்று அயிட்டங்களுக்குரிய அபிஷேகம் சாமான்கள் தேவஸ்தானத்திலேயே சப்ளை செய்யப்படும்.

21. விபூதி அபிஷேகம் ரூ. 3-00
22. சந்தனம் அபிஷேகம் ரூ. 3-00
23. கோடி தீர்த்தம் அபிஷேகம் செய்ய (மூன்று குடத்திற்கு) ரூ. 1-00

## அர்ச்சனைகள்

1. ஸ்ரீ இராமநாதசுவாமிக்கு சகஸ்ரநாம அர்ச்சனை (தற்சமயம் சகஸ்ரநாமம் கோடி அர்ச்சனை மூலம் நடைபெறுகின்றது) ரூ. 10-00
2. ஸ்ரீ அம்மாள், இதர சந்நிதிகள் சகஸ்ரநாமம் அர்ச்சனை செய்ய ரூ. 5-50

குறிப்பு : ஒவ்வொரு சகஸ்ரநாமத்திற்கும் நெய்வேத்யம் உண்டு நெய்வேத்யம் ரூ. 3/-லிருந்து ரூ. 10/- வரை பல தரத்தில் உள்ளது.

## விபரம் :

1. சர்க்கரைப் பொங்கல் ரூ. 3—50
2. வடை மாலை ரூ. 7—00
3. வடை ரூ. 4—00
4. புளியோதரை ரூ. 3—50
5. பாயாசம் ரூ. 3—00

| | | | |
|---|---|---|---|
| 6. | எள்ளோதரை | ரூ | 3—00 |
| 7. | பூந்தி லாடு | ரூ. | 10—00 |
| 8. | அதிரசம் | ரூ. | 7—00 |
| 9. | அப்பம் | ரூ. | 5—00 |
| 10. | பால் பாயாசம் | ரூ. | 4—00 |
| 11. | சம்பா | ரூ. | 3—00 |

3. திருவேத அர்ச்சனை ரூ. 2-00
பாயாசம் நெய்வேத்யம் ரூ. 3-00

4. ஸ்ரீ இராமநாதசுவாமிக்கு அஷ்டோத்திர அர்ச்சனை ரூ. 1-00

5. ஸ்ரீ அம்பாளுக்கும் இதர சந்நிதிகளுக்கும் ரூ. 0-50

6. பஞ்சமுக அர்ச்சனை (பூஜை சாமான் நீங்கலாக) ரூ. 20-00

7. 108 வெள்ளி வில்வதள அர்ச்சனை ரூ. 21-00

8. 1008 வெள்ளி வில்வதள சகஸ்ரநாமம் ரூ. 101-00

9. 108 தங்க வில்வதளம் அல்லது தங்க பகுள புஷ்பம் அஷ்டோத்திர அர்ச்சனை ரூ. 101-00

10. ரௌப்ய புஷ்ப அஷ்டோத்திரம் ரூ. 115-00

மேலே கண்ட கட்டணங்களில் பூஜா சாமான்கள் சேர்க்கப்படவில்லை. தங்கம், வெள்ளி, வில்வதளம், பகுள புஷ்பம் வெள்ளி ரூபாய் மேலே கண்ட டிக்கட்டுகளுக்கு அர்ச்சனைகள் நடத்த தேவஸ்தானத்திலிருந்து கொடுத்து வாங்கிக் கொள்ளப்படும்.

# இதர டிக்கட்டுகள் விபரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1) | ஹாரத்தி செய்ய டிக்கட் | ரூ. | 0—25 |
| 2) | மாலேகள் சாத்துப்படி செய்ய மாலே 1க்கு | ரூ. | 0—10 |
| 3) | கோடி தீர்த்தம் ஸ்நானம் செய்ய நபர் 1-க்கு | ரூ. | 0—05 |
| 4) | கோடி தீர்த்தம் பாத்திரத்தில் எடுத்துப் போக பாத்திரம் 1க்கு | ரூ. | 0—06 |
| 5) | சர்வ தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய நபர் 1க்கு | ரூ. | 0—05 |
| 6) | சாத்யாமிர்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய நபர் 1க்கு | ரூ. | 0—05 |
| 7) | லெக்ஷ்மண தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய நபர் 1க்கு | ரூ. | 0—05 |
| 8) | லெக்ஷ்மண தீர்த்தத்தில் சங்கல்பம் செய்ய குடும்பம் 1க்கு | ரூ. | 0—25 |
| 9) | ருத்ர ஜெபம் செய்ய நபர் 1க்கு | ரூ. | 1—00 |
| | ருத்ர ஜெப தெக்ஷிணே ,, | ரூ. | 1—00 |
| 10) | கெங்கை பூஜை (கோயிலுக்குள் செய்ய) | ரூ. | 0—50 |
| 11) | ஆலயத்திலுள்ள எல்லா தீர்த்தங்களேயும் லெக்ஷ்மண தீர்த்தம், அக்னி தீர்த்தம் முதலியதீர்த்தங்கள் காண்பிக்க வழிகாட்டியின் கட்டணம் | ரூ. | 2—00 |
| 12) | ஆபரணங்கள் பார்க்க (ஐந்து நபர்களுக்கு மேல் போகாமல்) (இது நிர்வாக அதிகாரி அவர்களின் செளகரியத்தை முன்னிட்டு காண்பிக்கப்படும்) | ரூ. | 20—00 |
| 13) | தங்கம், வெள்ளி வாகனங்கள், வெள்ளி ரதம் பார்க்க (10 நபர்களுக்கு) | ரூ. | 3—00 |

# இதர பூஜைகள்

| | | | |
|---|---|---|---|
| 1) | காலம் ஒன்றுக்கு பூஜை செலவு | ரூ. | 101—00 |
| 2) | காலம் ஐந்து பூஜை செலவு | ரூ. | 501—00 |
| 3) | ஸ்ரீ சக்ர ஸ்பெஷல் பூஜை செய்ய | ரூ. | 101—00 |

## அலங்காரம் செய்து தெரிவிக்க

1) தக்கப் பல்லக்கில் உற்சவ அம்பாள் அலங்காரம் செய்து தரிசிக்க ரூ. 51—00
2) ஷை அம்பாளுக்கு முத்து அங்கு சாத்துபடி செய்து தரிசிக்க ரூ. 15—00
3) உத்வை ஸ்ரீ இராமநாதசுவாமி அம்பாள் இரண்டு மூர்த்திகளுக்கும் ஆபரணம் சாத்துபடி செய்து தரிசிக்க ரூ. 51—00
4) ஷை வைர நகைகள் அலங்காரம் செய்து தரிசிக்க ரூ. 75—00
5) மூலஸ்தானம் ஸ்ரீ இராமநாதசுவாமிக்கு தங்க கவசம் நாகாபரணம் சாத்துபடி செய்ய ரூ. 5—00
6) மூலஸ்தான அம்பாளுக்கு சாத்துபடி செய்ய ரூ. 10—00

## உற்சவங்கள்

1) வெள்ளி ரத உத்ஸவம் ரூ. 500—00
2) பஞ்சமூர்த்தி உத்ஸவம் ரூ. 250—00
3) ஸ்ரீ அம்பாளுக்கு அலங்காரம் செய்து தங்கப் பல்லக்கில் வைத்து மூன்று பிரகாரம் சுற்றி வர ரூ. 101—00

**ஒருநாள் ஒருகால பூஜைக் கட்டளை நடத்த ரூ. 500/-**

ஸ்ரீ ராமநாத சுவாமிக்குக் குறிப்பிட்ட ஒருநாளில் ஒரு கால பூஜை நடத்த நிரந்தரக் கட்டளை ஏற்படுத்த ரூ. 600/- செலுத்தினுல் அதன் வட்டி வருமானத்திலிருந்து ஆண்டுதோறும் குறிப்பிட்ட நாளில் கட்டளையை நடத்த பிரசாதம் அனுப்பப்படும்.

குறிப்பு : ஷை அபிஷேக நைவேத்திய சாமான்களுக்குத் தேவஸ்தானத்தின் திட்டத்திற்குத் தக்கபடி டிக்கட்டுகள் கொடுக்கப்படும்.

மேற்கண்ட அபிஷேகங்கள் ஸ்ரீ இராமநாதர் விசுவநாதர், பர்வதவர்த்தனி அம்மை, விசாலாட்சி அம்மை ஆகிய தெய்வங்கட்கு நடக்கும்போது பால்,

தேன், சந்தனம், பஞ்சாமிர்தம் ஆகியவையும் அபிஷேகப் பொருள்களாக இருக்கும். கோயிலில் நாள்தோறும் நடைபெறும் விளாபூசை, காலசந்தி, உச்சிக்காலம், சாயங்கால பூசை, அர்த்தசாமம் ஆகிய வழிபாட்டுக் காலங்களிலும் இத்தெய்வங்கட்குப் பால், தேன், சந்தனம், பஞ்சாமிர்தம் ஆகியவை அபிஷேகம் செய்யப்படும். அபிஷேகம் முடிந்தவுடன் அதை நடத்துவித்தவர்கள் தமக்குரிய பிரசாதங்களை மடைப் பள்ளியில் பெற்றுக் கொள்ளலாம். அபிஷேகம் நடத் தாதவர்களும் பிரசாதங்களை விலைக்குப் பெறலாம். மடைப்பள்ளி, அம்மன் சந்நிதி வாசலுக்கருகில் இருக் கிறது. பஞ்சாமிர்த அபிஷேகத்திற்கும், ருத்திராபி ஷேகத்திற்கும் முறையே ரூ. 4ரூ. 6 விலையுள்ள கங்கை நீர் கோயில் அலுவலகத்திலிருந்து கொடுக்கப்படும். இவ்விலைத்தொகை அபிஷேகங்களுக்காகச் செலுத்தும் கட்டணத் தொகையில் அடங்கியதே. பாலபிஷேகம் மட்டும் செய்விக்க விரும்புவோர் கோயிலிலேயே பால் படி ஒன்றுக்கு ரூ. 1-50 வீதம் விலை செலுத்திப் பெறலாம். அர்ச்சனை செய்ய விரும்புவோர் கீழ்க் கண்ட முறைப்படி கட்டணங்கள் அர்ச்சனை சீட்டுப் பெற்று அர்ச்சகரிடம் தேங்காய், பழம் முதலியவற்றோடு கொடுக்கவேண்டும்.

## அர்ச்சனைகள்

1. சுவாமி ஸகஸ்ரநாம அர்ச்சனை 10—00

(தற்போது நடைபெற்று வரும் கோடி அர்ச்சனை வரிசையில் உள்ளபடி.)

2. ஷை ஸகஸ்ரநாம அர்ச்சனை அம்பாள் மற்றும் இதர சந்நிதிகளில் செய்ய 5 50

நைவேத்தியம் ஒவ்வொரு ஸகஸ்ரநாமத்திற்கும் தனித்தனியே செய்யவேண்டியதவசியம். ஷைநைவேத்

யங்கள் இரண்டு ரூபாயிலிருந்து ஒன்பது ரூபாய்வரை விருப்பத்திற்கேற்றவாறு செய்யப்படும்.

| | | | |
|---|---|---|---|
| 3. | திரிசதை அர்ச்சனை | 2 | 00 |
| | ஷை நைவேத்தியம் (பாயசம்) | 2 | 00 |
| 4. | சுவாமிக்கு அஷ்டோத்திரம் அர்ச்சனை செய்ய | 1 | 00 |
| 5. | ஷை அம்பாள் மற்றும் இதர சந்நிதிகளுக்குச் செய்ய | 0 | 50 |
| 6. | பஞ்சமுக அர்ச்சனை செய்ய பூஜா சாமான்கள் நீங்கலாக | 20 | 00 |
| 7. | வெள்ளி வில்வதள அர்ச்சனை செய்ய (அஷ்டோத்திற்கு) | 21 | 00 |
| 8. | ஷை ஸகஸ்ரநாம அர்ச்சனைகள் | 101 | 00 |
| 9. | தங்க வில்வதள அர்ச்சனை அல்லது தங்க பகுளபுஷ்ப அர்ச்சனை அஷ்டோத்திரம் | 101 | 00 |

ஷை கட்டணத்தில் பூஜை நைவேத்திய சாமான்கள் சேர்க்கப்படவில்லை.

நைவேத்தியத்திற்கென்று தனியாக கட்டணம் கொடுக்கப்பட்டால் தேவஸ்தானத்திலிருந்து செய்யப்படும்.

தங்கம், வெள்ளி, வில்வார்ச்சனைகளுக்குத் தேவஸ்தானத்திலிருந்து தங்கம், வெள்ளி வில்வதளங்கள் கொடுக்கப்பட்டுத் திரும்ப பெற்றுக் கொள்ளப்படும்.

## இதர வகைகளுக்குக் கட்டணங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | ஹாரத்தி செய்ய | 0 | 25 |
| 2. | புஷ்ப மாலை சாத்துபடி செய்ய (மாலை 1-க்கு) | 0 | 10 |

| | | | |
|---|---|---|---|
| 3. | கோடி தீர்த்தம் கோமுகி வழியாக வெளியிலிருந்து ஸ்நானம் செய்ய நபர் ஒன்றுக்கு | 0 | 03 |
| 4. | ஷை கோடி தீர்த்தம் பாத்திரங்களில் ஊற்றிக்கொடுக்க பாத்திரம் ஒன்றுக்கு | 0 | 06 |

**மற்ற தீர்த்தங்களில் ஸ்நானம் செய்ய**

| | | | |
|---|---|---|---|
| 5. | சர்வதீர்த்தம் நபர் ஒன்றுக்கு | 0 | 05 |
| 6. | சாத்யாமிர்த தீர்த்தம் ஷை | 0 | 05 |
| 7. | இலட்சுமண தீர்த்தம் ஷை | 0 | 05 |
| 8 | ஷை தீர்த்தத்தில் சங்கல்பம் செய்ய | 0 | 25 |
| 9. | ருத்திரஜெபம் செய்ய நபர் ஒன்றுக்கு | 1 | 00 |
| | ஷை ஜெப தெக்ஷிணை ,, | 1 | 00 |
| 10. | கோவிலுக்குள் கங்கா பூஜை செய்ய | 0 | 50 |
| 11. | ஷை தேவஸ்தானத்திலிருந்து ஒரு வழி காட்டியை அனுப்பி, இலட்சுமணதீர்த்தம்முதல் அக்னி தீர்த்தம்வரை தீர்த்தங்களைக் காண்பிக்க | 2 | 00 |
| 12. | கோயிலில் உள்ள நகைகளைக் காண்பிக்க (5 பேர் வரை) | 20 | 00 |

(தேவஸ்தானத்தின் சௌகரியத்திற்குத் தக்கபடி)

| | | | |
|---|---|---|---|
| 13. | தங்கம், வெள்ளி வாகனங்கள் பார்க்க பத்து நபர்களுக்கு மேற்படாமல் | 3 | 00 |

**இதர பூஜைகள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | ஒருகால பூஜைசெய்ய | 101 | 00 |
| 2. | ஷை ஐந்துகால பூஜைக்கு (ஷை பூஜை விளாபூஜை நீங்கலாக செய்யப்படும்.) | 501 | 00 |

ஷை ஐந்துகால பூஜை செய்யும் உபயதாரருக்குப் பரிவட்டம் கட்டி காளாஞ்சி மரியாதை செய்யப்படும்.)

3. பொன் ஸ்ரீ சக்கரத்திற்கு விசேஷ பூஜை செய்விக்கக் கட்டணம் 101 00

ஷை பூஜை சாதாரண நாட்களில் அம்மன் சந்நிதியிலும், வெள்ளிக் கிழமைகளில் உற்சவ அம்பாள்முன்னிலையிலும் தேவஸ்தானத்திட்டப்படி சாமான்கள் கொடுக்கப்பெற்று நடத்திவைக்கப் படும்.

## விசேஷ அலங்காரம்

1. உற்சவ அம்பாளைத் தங்கப் பல்லக்கில் அலங்காரம் செய்துவைத்துப் பார்க்க புறப்பாடு இல்லாமல் 51 00
2. உற்சவ அம்பாளுக்கு முத்தங்கி சேவை செய்ய 15 00
3. திருவாபரணங்கள் கொண்டு சுவாமிக்கு, அம்பாளுக்கு அலங்காரம் செய்விக்க 51 00
4. ஷை வைர நகைகள் சாத்துபடி செய்து பார்க்க 75 00
5. மூலஸ்தான அம்பாளுக்குத் தங்கக் கவசம் சாத்தித் தரிசனம் செய்ய 10 00
6. மூலஸ்தான ஸ்ரீ ராமநாதசுவாமிக்குத் தங்க நாகாபரணம் சாத்தித் தரிசிக்க 5 00

## உற்சவங்கள்

1. வெள்ளி இரதம் புறப்பாடு செய்விக்க 500 00
2. பஞ்சமூர்த்தி உற்சவம் செய்விக்க 250 00
3. தங்கப்பல்லக்கில் அம்பாளை மூன்றும் பிரகாரத்தில் எழுந்தருளுவிக்க 101 00

ஷை உற்சவங்கள், விசேஷ அலங்காரங்கள் செய்ய விரும்புபவர்கள், தேவஸ்தானத்தின் முன் அனுமதி பெற்று டிக்கட் பெற்றுக்கொள்ள வேண்டியது. தேவஸ்தானத்தாரின் சௌகரியப்படி நடத்தி வைக்கப்படும்.

# திருவிழாக்கள்

| எண் (1) | விழா (2) | தொடக்கம் (3) | முடிவு (4) | குறிப்பு (5) |
|---|---|---|---|---|
| 1. | மகாசிவராத்திரி (பார்க்க வேண்டியவை) | மகாசஷ்டி கிருஷ்ணபட்சம் மாசி (பிப்ரவரி, மார்ச்) | மகா கிருஷ்ண அமாவாசை | 10 நாட்கள் |
| | (A) ரிஷப வாகன தரிசனம் | | | |
| | (B) மகாசிவராத்திரி அபிஷேகம் | | | |
| | (C) வெள்ளிரதம் | | | |
| 2. | வசந்தோற்சவம் | வைசாக சுக்கில சஷ்டி-வைகாசி (மே-ஜுன்) | வைசாக பௌர்ணமி | 10 நாட்கள் |
| 3. | இராமலிங்கப் பிரதிஷ்டை உற்சவம் (பார்க்கத் தகுந்தது.) | ஜேஷ்ட சுக்கில சுத்த சஷ்டி, ஆனி (ஜுன்-ஜுலை) | ஜேஷ்ட பௌர்ணமி | 10 நாட்கள் |
| | (A) ரிஷப வாகனம் | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| 4. | திருக்கல்யாணம் (பார்க்கத் தகுந்தது)<br>(A) ரிஷப வாகனம்<br>(B) வெள்ளி ரதம்<br>(C) தபசு நாள்<br>(D) தங்கப் பல்லக்கில் சயன சேவை<br>(E) திருக்கல்யாணத் திருநாள் | ஆஷாட பகுள கிருஷ்ணாஷ்டமி (ஜூலை-ஆகஸ்டு) | சிராவண சுத்தம் | 17 நாட்கள் |
| 5. | நவராத்திரி விழா (தசரா) (விஜயதசமி நாள்) | பாத்ரபாத சுத்த சுக்கில பிரதமை புரட்டாசி (ஆகஸ்ட்-செப்டம்பர்) | தசமி | 10 நாட்கள் |
| 6. | கந்த சஷ்டி (சஷ்டி நாள்) | ஆஸ்வயாக சுத்த சுக்கில பிரதமை ஐப்பசி (செப்டம்பர்-அக்டோபர்) | ஆஸ்வயாக சுத்த சஷ்டி | 6 நாட்கள் |
| 7. | ஆருத்திரா தரிசனம் | மார்க்க சீரிஷ சுத்த சஷ்டி சதய நட்சத்திரம் மார்கழி (டிசம்பர்-ஜனவரி) | மார்க்க சீரிஷ சுத்த பௌர்ணமி | 10 நாட்கள் |

மேற்காணப்பட்டவையன்றி, கீழ்க்காணும் மாத, நாள், வார, பட்ச, மற்ற சிறப்பு விழாக்களும் உண்டு.

**1. மாத விழாக்கள்—கார்த்திகை நாட்கள் :**

சுப்பிரமணியரை (கார்த்திகேயன்) மயில் வாகனத்தில் எழுந்தருளச் செய்து இரவு 9 மணிக்குமேல் 10 மணிக்குள் வீதி உலா வருதல்.

**2. பட்ச விழாக்கள்—பிரதோஷங்கள் :**

மாலை 5க்கு மேல் 6 மணிக்குள் இராமநாத சுவாமியை ரிஷப வாசனத்தில் எழுந்தருளச் செய்து மூன்றும் பிரகாரத்தில் வலம் வருதல்.

**3. வார விழாக்கள்—வெள்ளிக்கிழமை :**

இரவு 9 மணிக்கு மேல் தங்கப் பல்லக்கில் பர்வத வர்த்தனி அம்பிகை, மூன்றும் பிரகாரத்தில் வலம் வருதல்.

**4. சிறப்பு விழாக்கள் :—**

கீழ்க்காணும் நாட்களில் பஞ்சமூர்த்தி உற்சவம் நடைபெறும் :—

(A) சங்கராந்தி தை (புஷ்ய) மாத முதல் நாள்.

(B) சித்திரை ஆண்டுப் பிறப்பு சித்திரைமாத முதல் நாள்.

(C) மகா கிருத்திகை (திருக்கார்த்திகை நாள்)

(D) தெப்போற்சவம்—தை மாத பௌர்ணமியில் பஞ்சமூர்த்தி புறப்பாடு.

(E) வைகுண்ட ஏகாதசியன்றும், ஸ்ரீ ராமநவமியன்றும் இராமருக்கு உற்சவம் உண்டு.

(F) ஆடி அமாவாசை, தை அமாவாசை நாட்களில் கோதண்டராமர் கருட வாகனத்தில் தனுஷ்கோடிக்கு எழுந்தருளித் தீர்த்தம் கொடுப்பார்.




N. B:—Rameswaram Road R. S. to Dhanushkodi R. S.—Old railway line since dismantled not in existence now.

இராமேசுவரம் ரோடு தனுஷ்கோடி இரயில் பாதை இப்போதில்லை.

# தேவஸ்தானம் தங்கும் விடுதி

## விபரங்கள்—கட்டணங்கள்

| | தங்கும் விடுதியின் பெயர் | வாடகை நாள் 1-க்கு | நபர் | குறிப்பு |
|---|---|---|---|---|
| 1. | ராமமந்திரம் பங்களா | ரூ. 15/- | 5 | மேற்கொண்டு ஒவ்வொரு நபருக்கும் ரூ. 1/- வீதம் 5 நபர் வரை. |
| 2. | ராமமந்திரப் அறை எண். 2 | ரூ. 3/- ஒரு கட்டில், குளியலறை இணைந்தது. | 4 | மேற்கொண்டு நபர் தங்க அனுமதியில்லை. |
| 3. | ஷை அறை எண். 3 | ஷை | 4 | ஷை |
| 4. | திருப்பணி பங்களா-கீழ்ப்பகுதி மூன்று கட்டில்கள், குளியலறை இணைந்தது. | ரூ. 10/- | 10 | மேற்கொண்டு தங்கும் ஒவ்வொரு நபருக்கும் தலா ரூ. 1/- வீதம் 10 நபர் வரை. |
| | ஷை மாடிப்பகுதி (இரண்டு கட்டில்) | ரூ. 5/- | 5 | மேற்கொண்டு தங்கும் ஒவ்வொரு நபருக்கும் தலா ரூ. 1/-: வீதம் 5 நபர் வரை. |

| | | | | |
|---|---|---|---|---|
| 5. | தங்கும் விடுதி எண். 4 | ரூ. 8/- | 4 | மேற்கொண்டு தங்கும் ஒவ்வொரு நபருக்கும் தலா ரூ. 1/- வீதம் 4 நபர் வரை. |
| 6. | ஷை எண். 5 | ரூ. 8/- | 4 | ஷை |
| 7. | ஷை எண். 6 | ரூ. 8/- | 4 | ஷை |
| 8. | ஷை எண். 7 (இரண்டு கட்டில்கள், குளியலறை இணைந்தது) | ரூ. 8/- | 4 | ஷை |
| 9. | ஷை விடுதி எண். 9 | ரூ. 10/- | 4 | ஷை |
| 10. | ஷை விடுதி எண். 10 | ரூ. 10/- | 4 | ஷை |
| 11. | ஷை விடுதி எண். 11 | ரூ. 8/- | 4 | ஷை |
| 12. | ஷை விடுதி எண். 12 | ரூ. 8/- | 4 | ஷை |
| 13. | ஷை விடுதி எண். 14 | ரூ. 8/- | 4 | ஷை |
| 14. | ஷை விடுதி எண். 15 | ரூ. 8/- | 4 | ஷை |
| 15. | ஷை விடுதி எண். 16 | ரூ. 8/- | 4 | ஷை |
| 16. | ஷை விடுதி எண். 13 (பொதுக் குளியலறை) | ரூ. 2/- | 2 | மேற்கொண்டு நபர்கள் தங்க அனுமதியில்லை. |
| 17. | விவேகானந்தர் இல்லம் 1 முதல் 17 அறைகள். ஒரு கட்டில், குளியலறை இணைந்தது. | ரூ. 6/- | 3 | ஷை |

## மற்ற விடுதிகள் (எல்லாருக்கும் பொதுவானவை)

1. மகாபீர் தர்மசாலை-இரயில் நிலையம் அருகில். (மின் விளக்கு–தண்ணீர்க் குழாயுடன்)
2. தஞ்சாவூர் இராஜாசத்திரம்–மேல ரத வீதி. (தர்மசத்திரம்)
3. இராமநாதபும் இராஜா சத்திரம்–மேலக் கோபுர வாசலருகில். (மின் விளக்குகளுடன்.)(ஷை)
4. வேங்கடராயர் சத்திரம்–மேலரத வீதி (மின் விளக்குகளுடன்.) (ஷை)
5. யாழ்ப்பாண சத்திரம்–வடக்கு ரத வீதி.
6. இராமகுமார் சத்திரம்–மேல ரத வீதி
7. திருப்பனந்தாள்–காசி மடம்–கிழக்கு சந்நிதித் தெரு (மின் விளக்குகளுடன்.)

## வட நாட்டினர்க்கு மாத்திரம்

1. தூத்வாலா தர்மசாலை–கங்காதர பீதாம்பர பண்டா நிர்வாகம்-இரயிலுக்குப் போகும் சாலை. (மின் விளக்குகளுடன்.)
2. பென்சிலால் அபீர்சந்த் தர்மசாலை–மேலத் தெரு. (மின் விளக்குகளுடன்)
3. குஜராத்தி சத்திரம்-வடக்கு ரத வீதி. (மின் விளக்குகளுடன்)
4. அகல்யாபாய் சத்திரம்-கிழக்கு சந்நிதித் தெரு (மின் விளக்குகள்)
5. ஆமதாபாத் சேட் மாணிக்கசந்த் கோவன்தாஸ் சத்திரம், மேலத் தெரு. (மின் விளக்குகளுடன் )
6. இராஜா சிவபாக்ஸ் பாக்லா சத்திரம்–மேலத் தெரு. (மின் விளக்குகளுடன் )

7. மீர்சாபூர் பிண்ணுனி சத்திரம்-நடுத்தெரு.
(மின் விளக்குகளுடன்)
8. பகவான்தாஸ் பாக்லா சத்திரம்-திட்டகுடி.
(காஷ்மீர்காரர்களுக்கு மட்டும்)
9. ஜம்மு சத்திரம்-நடுத்தெரு. (காஷ்மீர்காரர்களுக்கு மட்டும்)

## ஆந்திரர்களுக்கு மட்டும்

1. சித்திரகந்தையா துவிவாசுலு சத்திரம்—வர்த்தகர் தெரு.
2. அரங்கையா செட்டியார் சத்திரம்-வர்த்தகர் தெரு.
3. விஜயவாடா சுண்டூ வெங்கடரெட்டி சத்திரம்-வர்த்தகர் தெரு.
4. கர்லாபாடி சாமளா அம்மாள் சத்திரம்-மேலத்தெரு

## மற்றவர்களுக்கு

1. ஆரிய வைசிய சத்திரம்-மேலத்தெரு-ஆரிய வைசியர்களுக்கு.
2. ரெட்டியார் மடம்-மேலத் தெரு-ரெட்டியார் களுக்கு
3. நாடார் சத்திரம்-புதுத் தெரு-நாடார்களுக்கு.
4. பரமக்குடி ஐயாசாமி செட்டியார் சத்திரம்-மேற்கு ரத வீதி-காசுக்காரச் செட்டியார்களுக்கு.
5. நகரத்தார் விடுதி-தெற்கு ரத வீதி-நகரத்தார் களுக்கு.
6. மதுரை வி. எஸ். கே. முத்துராமய்யர் சத்திரம்-கிழக்கு ரத வீதி-சௌராஷ்டிரா பிராமணர்-களுக்கு.

7. குசலரா சத்திரம்-தெற்கு ரத வீதி-சௌராஷ்டிர பிராமணர்களுக்கு.

8. உடுப்பி நரசிம்மராவ் சத்திரம்-வடக்கு ரத வீதி-உடுப்பி பிராமணர்களுக்கு.

9. காசி மடம்–நடுத்தெரு–கொங்கணி பிராமணர்க்கு.

## இராமேசுவரம்-சேதுவைப் பற்றிக் குறிப்புக்கள் உள்ள நூல்கள்

1. ரிக்வேதம்
2. தைத்திரிய சம்ஹிதை அல்லது கிருஷ்ணயஜுர் வேதம்.
3. மனு ஸ்மிருதி
4. காலவ ஸ்மிருதி
5. கௌதம ஸ்மிருதி
6. மரீசி ஸ்மிருதி
7. தேவல ஸ்மிருதி
8. பராசர ஸ்மிருதி
9. வால்மீகி இராமாயணம்
10. அத்யாத்ம இராமாயணம்
11. ஆநந்த இராமாயணம்
12. கம்பராமாயணம்
13. துளசிதாஸ் இராமாயணம்
14. ஆக்நேய புராணம்
15. பாகவத புராணம்
16. பத்ம புராணம்
17. சிவ புராணம்
18. கூர்ம புராணம்
19. ஸ்கந்த புராணம்
20. மார்க்கண்டேய புராணம்

21. பிரம்மாண்ட புராணம்
22. மச்ச புராணம்
23. தெய்வ கணபதி—துதி
24. திருஞானசம்பந்தர் தேவாரம்
25. அப்பர் தேவாரம்
26. சேக்கிழார் பெரிய புராணம்
27. அருணகிரிநாதர் திருப்புகழ்
28. தாயுமானவர் பாடல்
29. அருணசல கவிராயர் பாடல்கள்
30. வேதாந்த தேசிகர்-தயாசதகம்
31. வேங்கடாத்ரி-விஷ்வகுண தர்சம்
32. பரஞ்ஜோதி முனிவர்-திருவிளையாடற் புராணம்
33. சொக்கநாதப் புலவர்-தேவையுலா
34. நிரம்ப அழகிய தேசிகர்-சேது புராணம்

# இராமேசுவரம்

## பொதுத் தகவல்கள்

அ. பரப்பளவு: 13, 224-22 - ஏக்கர்கள்.

ஆ. மக்கள் தொகை: 10,173. (1961ம் வருட ஜனத் தொகை கணிப்புப்படி)

இ. இடம்: கடல் மட்டத்திற்கு மேல்உயரம்.10'

ஈ. வெப்ப தட்ப நிலை கோடை உஷ்ணம் :
உயர்ந்த அளவு 48°
குறைந்த அளவு 46°
குளிர்கால உஷ்ணம் : உயர்ந்த அளவு 30°
குறைந்த அளவு 25°
மழை : சராசரி—32''

உ. விசேட உற்சவகாலம்: பிப்ரவரி—மார்ச்—சிவராத்திரி,
ஜுலை —ஆகஸ்டு—ஆடித் திருக்கல்யாணம்.

ஊ. பேசப்படும் மொழிகள்:- தமிழ், ஆங்கிலம், ஹிந்தி, மராதி, மற்றும் வட இந்திய மொழிகள்

செய்தி, போக்குவரத்து :

அருகிலுள்ள விமான நிலையம் : மதுரை—150 கி. மீ.

புகைவண்டி நிலையம் : ராமேசுவரம்.
ராமேசுவரம் – மண்டபம் ரயில் மார்க்கம்
மண்டபத்திலிருந்து வடக்கே ரயில, மற்றும் பேருந்திகள்.

**ரயில் செல்லும் மார்க்கம் :**

துரித வண்டி — சென்னை — 650 கி. மீ. வழி : மானாமதுரை, திருச்சி, தஞ்சாவூர், சிதம்பரம்.

பிரயாணிகள் வண்டி —சென்னை — 650 கி. மீ. வழி : மானாமதுரை, திருச்சி, விழுப்புரம்.

துரித வண்டி —கோயம்புத்தூர்— 376 கி. மீ. வழி : மதுரை, திண்டுக்கல், பழனி,

பிரயாணிகள் வண்டி—மதுரை — 148 கி. மீ. வழி : மானாமதுரை.

ஷடில் —மண்டபம்வரை—18 கி. மீ.

**பேருந்திகள் :** வடக்கிலிருந்து வரும் பேருந்திகள் மண்டபம் வரை வரும். அதற்குத் தெற்கில் சாலை வசதியில்லாததால் ரயிலில்தான் ராமேசுவரம் வரவேண்டும்.

மருத்துவ மனைகள் : 1) அரசினர் மருத்துவ மனை — தொலைபேசி. எண். 33.

2) ஆலய ஆயுர் வேத மருத்துவ மனை :

அஞ்சல் தந்தி அலுவலகம்:ஆலய மேலக் கோபுரம் சமீபம் நடுத்தெருவில் உள்ளது. தொலைபேசி எண். 25.

# இராமேச்சுர துதிப்பாக்கள்

## தெய்வ கணபதி துதி

வேணிமுடிப் பகீரதிநீர் புழைக்கை வாங்கி விடுத்(து,)
அயன்வெண் தலையுருட்டி, மிளிர்வெண் கோட்டால்
கோண்இளைய மதிக்குழவி உழுது, மேருக்
கொடுமுடியிற் கிளைத்த எண்தோள் குழையத் தாக்கி,

தாள்நெடிய விடைமுனிந்து, கயிலை முக்கண்
தாதையொடும் விளையாடித், தன்பால் அன்பர்
மாண்நிலவு மனத்தறி நின்(று,) உலவும் தெய்வ
வாரணத்தை நினைத்திறைஞ்சி வழுத்தல் செய்வாம்—
(சேதுபுராணம்)

## திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிய

இராமேச்சுரத் திருப்பதிகம்
பண்-காந்தார பஞ்சமம்.
திருச்சிற்றம்பலம்.

அலைவளர் தண்மதி யோ(டு) அயலே அடக்கி, உமை
முலைவளர் பாகம் முயங்க வல்ல முதல்வன்முனி,
இலைவளர் தாழைகள் விம்மு கானல் இராமேச்சுரம்
தலைவளர் கோலநல் மாலையன் தான் இருந்(து) ஆட்சியே. 1

தேவியை வவ்விய தென்னிலங்கைத் தச மாமுகன்
பூவியலும் முடி பொன்றுவித்த பழி போய்அற
ஏ(வு) இயலும் சிலை அண்ணல் செய்த இராமேச்சுரம்
மேவிய சிந்தையி ஞர்கள்தாம் மேல் வினை வீடுமே. 2

மானன நோக்கியை தேவி தன்னை, ஒரு மாயையால்
கானத்தில் வவ்விய கார் அரக்கன் உயிர் செற்றவன்
ஈனம் இலாப் புகழ் அண்ணல் செய்த இரோமேச்சுரம்,
ஞானமும், நன்பொருள் ஆகிநின்ற(து) ஒரு நன்மையே. 3

உரை உணராதவன், காமம் என்னும் உறுவேட்கையால்,
வரைபொரு தோள் இறச் செற்ற வில்லி மகிழ்ந்(து) ஏத்திய
விரை மருவும் கடல் ஓதம் மல்கும் இராமேச்சுரத்(து,)
அரை அரவு ஆட நின்று. ஆடல் பேணும் அம்மான்
நல்லனே. 4

ஊறுடை வெண்தலை கையில் ஏந்திப் பல ஊர்தொறும்
வீறுநடை மங்கையர் ஐயம் பெய்ய, விறல் ஆர்ந்த(து) ஓர்
ஏறுடை வெல்கொடி எந்தைமேய இராமேச்சுரம்,
பேறுடையான் பெயர் ஏத்தும் மாந்தர் பிணி பேருமே; 5

அணை அலை சூழ்கடல், அன்(று) அடைத்து வழி செய்தவன்
பணை இலங்கும் முடி பத்(து) இறுத்த பழி போக்கிய
இணையிலி, என்றும் இருந்த கோயில் இராமேச்சுரம்,
துணையிலி, தூமலர்ப் பாதம் ஏத்தத் துயர் நீங்குமே. 6

சனி புதன் ஞாயிறு வெள்ளி திங்கள் பல தீயன,
முனிவது செய்(து) உகந்தானை வென்று, அவ்வினை மூடிட
இனி அருள் நல்கி(டு) என்று, அண்ணல் செய்த
இராமேச்சுரம்
பனிமதி சூடிநின்று, ஆடவல்ல பரமேட்டியே. 7

பெருவரை அன்(று) எடுத்து ஏந்தினன் தன் பெயர் சாய்கெட
அருவரையூல் அடர்த்து அன்று நல்கி, அயன்மால் எனும்
இருவரும் நாடி நின்(று) ஏத்து கோயில் இராமேச்சுரத்(து)
ஒருவனுமே பல ஆகி நின்ற(து) ஒரு வண்ணமே. 8

சாக்கியர் வன்சமண் கையர், மெய்யில் தடுமாற்றத்தார்
வாக்(கு) இயலும் உரை பற்று விட்டு, மதி ஒண்மையால்
ஏக்(கு) இயலும் சிலை அண்ணல் செய்த இராமேச்சுரம்
ஆக்கிய செல்வனை, ஏத்தி வாழ்மின் அருள் ஆகவே. 9

பகலவன் மீ(து) இயங்காமை காத்த பதியோன்தனை,
இக(ல்) அழிவித்தவன் ஏத்து கோயில் இராமேச்சுரம்,
புகலியுள் ஞானசம் பந்தன் சொன்ன தமிழ், புந்தியால்
அக(ல்) இடம் எங்கும் நின்(று,) ஏத்த வல்லார்க்(கு)
இல்லை அல்லலே. 10

திருச்சிற்றம்பலம்.

## திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிய

### இராமேச்சுர திருப்பதிகம்

பண்-பழம் பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்.

திரிதரு மாமணி நாகம் ஆடத் திளைத்(து,) ஒரு தீஅழல்வாய்
நரிகதிக்க எரியேந்தி ஆடும் நலமே தெரிந்(து) உணர்வார்
எரிகதிர் முத்தம் இலங்கு கானல், இராமேச்சுரம் மேய
விரிகதிர் வெண்பிறை மல்கு சென்னி விமலர் சேயும்
செயலே 1

பொறிகிளர் பாம்(பு) அரை ஆர்த்து,
அயலே புரிவோ(டு) உமைபாடத்,
தெறிகிளரப் பெயர்ந்(து) எல்லி ஆடும்
திறமே தெரிந்(து) உணர்வார்!
எறிகிளர் வெண்திரை வந்துபேரும்
இராமேச்சுரம் மேய
மறிகிளர் மான்மழுப் புல்குகை, எம்
மணாளர் செயும் செயலே. 2

அலைவளர் தண்புனல் வார்சடைமேல் அடக்கி, ஒரு பாகம்
மலைவளர் காதலி பாட ஆடி, மயக்கா வரும் மாட்சி
இலைவளர் தாழை முகிழ்விரியும் இராமேச்சுரம் மேயார்
தலைவளர் கோலநன் மாலை சூடும் தலைவர் செயும் செயலே. 3

மாதன நேரிழை ஏர் தடங்கண்
மலையான் மகள் பாடத்,
தே(து)எரி அங்கையில் ஏந்தி ஆடும்
திறமே தெரிந்துணர்வார் ;
ஏதம்இலார் தொழு(து) ஏத்தி வாழ்த்தும்
இராமேச்சுரம் மேயார்,
போதுவெண் திங்கள் பைங்கொன்றை சூடும்
புனிதர் செயும் செயலே. 4

சூலமோ(டு) ஒண்மழு நின்(று) இலங்கச்,
சுடுகா(டு) இடமாகக்,
கோல நன் மா(து) உடன் பாட, ஆடும்
குணமே குறித்(து) உணர்வார் ;
ஏல நறும் பொழில் வண்டு பாடும்
இராமேச்சுரம் மேய,
நீலமார் கண்டம் உடைய எங்கள்
நிமலர் செயும் செயலே. 5

கணையிணை வெஞ்சிலை கையில் ஏந்திக்,
காமனைக் காய்ந்தவர்தாம்;
இணைபிணை நோக்கி நல்லா ளோ(டு) ஆடும்
இயல்பினராகி நல்ல
இணைமலர் மேல் அன்னம் வைகு கானல்
இராமேச்சுரம் மேய
அணைபிணை புல்கு கரந்தை சூடும்
அடிகள் செயும் செயலே. 6

நீரினர் புன்சடை பின்பு தாழ,
நெடுவெண் மதி சூடி,
ஊரினர் துஞ்சிருள் பாடி ஆடும்
உவகை தெரிந்(து) உணர்வார்;
ஏறினர் பைம்பொழில் வண்டு பாடும்
இராமேச்சுரம் மேய
காரினர் கொன்றை வெண் திங்கள் சூடும்
கடவுள் செயும் செயலே. 7

பொன்திகழ் சுண்ணவெண் ணீறு பூசிப்
புலித்தோல் உடையாக,
மின்திகழ் சோதியர், பாடல் ஆடல்
மிக்கார் வரும் மாட்சி
என்றும் நல்லோர்கள் பரவி ஏத்தும்
இராமேச்சுரம் மேயார்,
குன்றினால் அன்(று) அரக்கன் தடந்தோள்
அடர்த்தார் கொளும் கொள்கையே. 8

கோவலன் நான்முகன் நோக்கொணாத
குழகன், அழகாய
மேவலன் ஒள்ளெரி ஏந்தி ஆடும்
இமையோர் இறை, மெய்ம்மை
ஏவலனார் புகழ்ந்(து) ஏத்தி வாழ்த்தும்
இராமேச்சுரம் மேய
சேவல வெல்கொடி ஏந்து கொள்கை,எம்
இறைவர் செயும் செயலே. 9

பின்னொடு முன்னிடு தட்டை சாத்திப்,
பிரட்டே திரிவாரும்
பொன்னெடும் சீவரப் போர்வையார்கள்.
புறம் கூறல் கேளாதே,
இன்னெடும் சோலை வண்(டு) யாழ்முரலும்
இராமேச்சுரம் மேய.
பன்னெடு வெண்தலை கொண்(டு) உழலும்
பரமர் செயலும் செயலே. 10

தேலியை வவ்விய தென் இலங்கை
அரையன் திறல் வாட்டி,
ஏ(வு)இயல் வெஞ்சிலை அண்ணல்,
நண்ணும் இராமே சுரத்தாரை,

நா(வு)இயல் ஞானசம்பந்தன்
நல்ல மொழியால் நவின்(று) ஏத்தும்
பாஇயல் மாலை வல்லார், அவர்தம்
வினை ஆயின பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய
## இராமேச்சுர திருப்பதிகம்.

திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பாசமும் கழிக்ககில்லா அரக்கரைப்
படுத்துத், தக்க
வாசமிக்(க) அலர்கள் கொண்டு,
மதியினால் மால்செய் கோயில் ;
நேசம் மிக்(கு,) அன்பினாலே
நினைமின் நீர் நின்று நாளும் ;
தேசம் மிக்கான் இருந்த
திரு இராமேச்சுரமே. 1

முற்றின நாள்கள் என்று
முடிப்பதே காரணமாய்,
உற்றவன் போர்களாலே
உணர்விலா அரக்கர் தம்மைச்
செற்றமால் செய்த கோயில்,
திருஇராமேச்சுரத்தைப்
பற்றிநீ பரவு நெஞ்சே !
படர்சடை ஈசன்பாலே. 2

கடலிடை மலைகள் தம்மால் அடைத்து,
மால் கருமம் முற்றித்,
திடலிடைச் செய்த கோயில்
திருஇரா மேச்சுரத்தைத்,
தொடல் இடை வைத்து நாவில்
சுழல்கின்றேன், தூய்மை யின்றி
உடலிடை நின்றும் பேரா
ஐவர் ஆட்டுண்டு நானே. 3

குன்றுபோல் தோளுடைய குணமிலா
அரக்கர் தம்மைக்
கொன்று, போர் ஆழி அம்மால்
வேட்கையால் செய்த கோயில் :
நன்றுபோல் நெஞ்சமே! நீ
நன்மையை அறிதி யாயில்,
சென்றுநீ தொழு(து)உய் கண்டாய்,
திருஇரா மேச்சுரமே. 4

வீரம் மிக்(கு) எயிறு காட்டி
விண்ணுற நீண்(டு) அரக்கன்
கூரம் மிக்கவனைச் சென்(று,)
உடன் கடல் படுத்துத்,
தீரம் மிக்கான் இருந்த
திருஇரா மேச்சுரத்தைக்,
கோர மிக்(கு) ஆர் தவத்தால்
கூடுவார் குறிப்புளாரே. 5

ஆர்வலம், நம்மின் மிக்கார்? என்ற அவ் அரக்கர் கூடிப்
போர்வலம் செய்து, மிக்குப் பொருதவர் தம்மை வீட்டித்
தேர்வலம் செற்ற மால் செய் திருஇரா மேச்சுரத்தைச்
சேர்மட நெஞ்சமே நீ, செஞ்சடை எந்தை பாலே. 6

வாக்கினுல் இன்புரைத்து வாழ்கிலார்
தம்மை எல்லாம்
போக்கினுல் புடைத்(து) அவர்கள்
உயிர்தனை உண்டு, மால்தான்
தேக்குநீர் செய்த கோயில்
திருஇரா மேச்சுரத்தை,
நோக்கினுல் வணங்குவார்கள்,
நோய்வினை நுணுகும் அன்றே. 7

பலவுநாள் தீமை செய்து, பார்தன் மேல் குழுமி வந்து,
கொலைவிலார் கொடியர் ஆய அரக்கரைக் கொன்றுவீழ்த்த
சிலையினுன் செய்த கோயில் திரு இரா மேச்சுரத்தைத்
தலையினுல் வணங்குவார்கள், தாழ்வராம் தவம(து) ஆமே. 8

கோடி மாதவங்கள் செய்து, குன்றினுர் தம்மை எல்லாம்
வீடவே சக்கரத்தால் எறிந்து, பின் அன்பு கொண்டு
தேடி மால் செய்த கோயில் திருஇரா மேச்சுரத்தை
நாடி வாழ் நெஞ்சமே! நீ நன்னெறி ஆகும் அன்றே. 9

வன்கண்ணர், வாள் அரக்கர், வாழ்வினை ஒன்(று) அறியார்?
புன்கண்ணர் ஆகி நின்று, போர்கள் செய்தாரை மாட்டிச்
செங்கண் மால் செய்த கோயில், திருஇரா மேச்சுரத்தைத்
தங்கணுல் எய்த வல்லார், தாழ்வராம் தலைவன் பாலே. 10

வரைகள் ஒத்தே உயர்ந்த
மணிமுடி அரக்கர் கோனை
விரைய முற்(று) அற ஒடுக்கி,
மீண்டு மால் செய்த கோயில் ;
திரைகள் முத்தால் வணங்கும்
திருஇரா மேச்சுரத்தை,
உரைகள் பத்தால் உரைப்பார்
உள்குவார் அன்பினுலே. 11

திருச்சிற்றம்பலம்

## ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷதர் க்ருதி

ராகம்: காமவர்த்தனி. தாளம்: ஆதி.

பல்லவி

ராமனுதம் பஜேஹரம்
ராமசந்த்ர பூஜிதம் (ராம)

அனுபல்லவி

காமித பலப்ரததேவம்
கோடி தீர்த்த பிரபாவம்
குமார குருகுஹ மஹிதம் கவிபிருந்தாதிஸன்னுதம்
(ராம)

சரணம்

ஸேது மத்ய கந்தமாதன பர்வத விஹாரம்
ஸதா பர்வதவர்த்தனி மனோல்லாசகரம்
ஹஸ்தாமலக வந்திய வரம்
ஹாடகமய சேலதரம்
ஹத்யாதி பாப ஹரம்
ஹம் ஸஸ்ஸோ ஹாகாரம் (ராம)

## அஞ்சலி

எழும்போதும் ராம ராம என்பேன்; எழுந்தே மகிழ்ந்து
தொழும்போதும் ராம ராம என்பேன்; தொழுதே உருகி
அழும்பொழுதும் ராம ராம என்பேன்; அடியேன் உடலம்
விழும்பொழுதும் ராம ராம என்பேன் சேவை விரைந்தருளே!
அடிக்கினும் ராம ராம என்பேன்; அரவம் துரத்திக்
கடிக்கினும் ராம ராம என்பேன்; கருங் காலன் எனைப்
பிடிக்கினும் ராம ராம என்பேன்; பெருந் தீயில் மண்டை
வெடிக்கினும் ராமஸ்ரீ ராம என்பேன்; என்முன் வந்தருளே!
(இராம என்பது-தாரகமந்திரம்)

குகஸ்ரீ ரஸபதி

அருணகிரிநாதர் அருளிய

# திருப்புகழ்

வாவலய,தாகி,அழ காகி, மத ஞகி பணி
வாணிப மொ(டு) ஆடிமருள் ஆடி,விளை யாடி, விழல்
வாழ்வு சதம் ஆகி,வலு வாகி,மட கூடமொடு பொருள்தேடி.

வாச புழுகோடு,மல ரோடு,மணம் ஆகி,மகிழ்
வாசனைகள் ஆதி யிடல் ஆகி,மயல் ஆகி,விலை
மாதர்களை மேவிஅவர் ஆசைதனி லேசுழல சிலநாள்போய்த்

தோல் திரைகள் ஆகி,நரை யாகி,குரு டாகி,இரு
கால்கள் தடுமாறி, செவி மாறி, பசு பாசபதி
சூழ்கதிகள் மாறி, சுகம் மாறி,தடி யோடுதிரி யுறுநாளின்,

சூலை, சொறி, ஈளை, வலி, வாதமொடு, நீரிழிவு,
சோகை,கள மாலை, சுர மோடு, பிணி, தூ(று) இருமல்
சூழலுற, மூலகசு மாலம் என நாறிஉடல் அழிவேனோ?

நாலுமுகன் ஆதி அரி ஓம் என,அ தாரம் உரை
யாதபிர மாவை விழ மோதி, பொருள் ஓதுகென,
நாலு சிர மோடு, சிகை தூளி பாட தாளம்இடும்
இளையோனே!

நா(று) இதழி வேணி,சிவ ரூப கலியாணி முதல்
ஈண மக ஆனை மகிழ் தோழ! வன மீது செறி
ஞானகுற மாதை, தினை காவில் மணம் மேவுபுகழ்
மயில்வீரா!

ஓலமிடு தாடகை, சு வாகு,வளர் ஏழுமரம்,
வாலியொடு,நீலி, பகனோ(டு) ஒருவி ராதன் எழும்
ஓதகட லோடு,விறல் ராவண குழாம் அமரில் பொடியாக

ஓகை தழல் வாளிவிடு மூரிதநு,நேமி,வளை
பாணி, திரு மார்பின் அரி கேசன் மரு காஎனவெ,
ஓத மறை ராமேசுரம் மேவுகும ராஅமரர் பெருமாளே !

---

வானோர் வழுத்துனது பாதார பத்மமலர்
மீதே, பணிக்கும் வகை அறியாதே.
மானார் வலைக் கண்அதி லே,தூளி மெத்தையினில்
ஊடே அணைத்(து) உதவும் அதனாலே

தேனோடு, மருப்பில் எழு பாகோ,இதற்(கு) இணைகள்
எதோ எனக் கலவி பலகோடி
தீரா மயக்கினொடு,நாகா படத்தில் எழு
சேருடல் பெற்ற துயர் ஒழியேனோ ?

மேனாடு பெற்றுவளர் சூராதி பற்(கு) எதிரின்
ஊ(டு) ஏகி நிற்கும் இரு கழலோனே !
மேகார உக்ர பரி தான் ஏறி, வெற்றிபுனை
வீரா ! குறச் சிறுமி மணவாளா !

ஞானா பரற்(கு) இனிய வேதாக மப்பொருளை
நானு(து) உரைக்கும் ஒரு பெரியோனே !
நாரா யணற்கு மருகா ! வீறு பெற்றிலகு
ராமேச்சு ரத்திலுறை பெருமாளே ! 2

## தாயுமானார் பாடல்

பதியுண்டு, நிதியுண்டு, புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுண்(டு), எக்காலமும்
பவிசுண்டு, தவிசுண்டு, திட்டாந்தம் ஆக யம
படர் எனும் திமிரம் அணுகாக்
கதியுண்டு, ஞானமாம் கதிருண்டு, சதிருண்டு,
காயசித் திகளும் உண்டு ;
கறையுண்ட கண்டர்பால், அம்மை ! நின்தாளிற்
கருத்(து) ஒன்றும் உண்டாகுமேல் ;

நதியுண்ட கடலெனச், சமயத்தை உண்டபர
ஞான ஆநந்த ஒளியே ;
நாதாந்த ரூபமே ! வேதாந்த மோனமே !
நான் எனும் அகந்தை தீர்த்(து) என்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே !
மது சூதனன் தங்கையே !
வரை ராஜனுக்(கு) இருகண் மணியாய் உதித்தமலை
வளர் காதலிப் பெண் உமையே ! 1

---

பூரணி, புராதனி, சுமங்கலை, சுதந்தரி,
புராந்தகி, த்ரியம்பகி, எழில்
புங்கவி, விளங்குசிவ சங்கரி, சகஸ்ரதள
புட்பமிசை வீற்றிருக்கும்
நாரணி, மனுதீத நாயகி, குணாதீத
நாதாந்த சக்தி என்றுன்
நாமமே உச்சரித்திடும் அடியார் நாமமே
நான் உச்சரிக்க வசமோ ?
ஆரணி, சடைக்கடவுள் ஆரணி எனப் புகழ,
அகிலாண்ட கோடி யீன்ற
அன்னையே ! பின்னையும் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூப மயிலே !
வாரணியும் இரு கொங்கை மாதர் மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவை அரசே !
வரை ராஜனுக்(கு) இரு கண் மணியாய் உதித்தமலை
வளர் காதலிப் பெண் உமையே ! 2

## ஸ்ரீ பர்வத வர்த்தனி பிள்ளைத் தமிழ்

வரும்பே ரின்பத் துறை கொழிக்கும்
மணியே வருக ! சிவாநந்த
வடிவே வருக ! உயிர் மலநோய்
மாற்றும் மருந்தே வருக ! பசும்
கரும்பே வருக ! எங்கள் இரு
கண்ணே வருக ! கண்மணியுள்
கலந்த பாவாய் வருக ! சிவம்
கமழ்தேன் கலந்துள் களித்தருத்தும்

கரும்பே வருக ! முத்திநெறித்
துணையே வருக ! பவம் தொலைக்கும்
சுடரே வருக ! தொண்டர் குழாம்
தொகும்இ ராமே சத்தில் உறை
தரும்தேம் கனியே வருக ! உயர்
தாயே வருக வருகவே !
சலியா(து,) அருளும் மலைவளர்கா
தலியே வருக, வருகவே ! 1

செய்ந்நன்றி கொன்ற பாவம் தவிர்த்திடு சங்க
தீர்த்தம் ; நல்சீதை கற்பின்
திறம் அறிவுறுத்தும் அக்கினி தீர்த்தம் ; அறுபட்ட
செங்கையும் காலும் வளர
உய்ந்நன்றி செய்தமுனி தீர்த்தம் ; சிவார்ச்சனைக்(கு)
உபயோகமா உஞற்றல்
உற்று, வறுமைப் பிணி அகற்று இலக்குமி தீர்த்தம் ;
உயர்கால வயிரவர்க்குப்
பெய்ந்நன்று தவிர் பிரம கத்தியகல் வித்தஒரு
பெரியசிவ தீர்த்தம் ; என்றும்
பெயராஇ ராமேசுரத்(து) உள(து) அன்றியும்
பேசுவார் மாசு பிரிய
மெய்ந்நன்றி அருளும்நீ, பொதிகை நின்(று)
எழுபொறை வெள்ள நீர் ஆடியருளே !
மெய்த்தவர் தொழும் பர்வத வர்த்தனி ! வரும் புதிய
வெள்ள நீர் ஆடியருளே ! 2

கவியில் உயர் கம்பன்போல் எழுபது
வெள்ளம் கொண்ட கவிகட் கெல்லாம்
புவியில் உயர்வுற்(று,) இராகவன் தூதாய்,
இலங்கையிற் போய்ப் பொருது மீண்டு,
குவிகையொடு காசியிற் சென்(று) இறைஞ்சி, இரு.
சிவலிங்கம் கொணர்ந்து தாபித்(து,)
அவிர்இரா மேச்சுரத்தில் அமர் அநும
கவிஇருசீர் அடிகள் போற்றி.

## சேது-புராணம் இராமநாதர் சருக்கம்

நாவினுல் ராம நாதன் நல்லருள் வழுத்த, நாளும்
பூவினுல் பூசைசெய்யப் ; புகழ்ந்திடச் சேதுவின்கண்
சாவுறக் கிடையாது யார்க்கும் தாணுவே, நீயேதாணு
ஆவதென்று ணர்வார் வென்றி அடைகுவர் இங்கும்
அங்கும். 1

வேதநூல் சாத்திரங்கள் வேள்விகள் எல்லாம் ராம
நாதனே பிறிதொன்றில்லை ; நம்பனை யவனைத் தானே
ஆதரவதனுல் போற்றி, யடிதொழல் வேண்டும் ; அன்னேன்
தா(து) அவிழ், சரோருகப்பூஞ் சரணமே சரணம் ஆனேர். 2

## ஸ்ரீ ஆஞ்சநேயர் துதி

அஞ்சிலே ஒன்று பெற்றான்,
அஞ்சிலே ஒன்றைத் தாவி,
அஞ்சிலே ஒன்(று) ஆருக
ஆரியற்காக ஏகி,
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக்
கண்(டு,) அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்று வைத்தான், அவன்
எம்மை அளித்துக் காப்பான். (கம்பர்)

## சேதுபுராண வாழ்த்து

மாதுகலை வளர்காதல் வல்லி வாழ்க !
மாற்(கு) அருள் கூர் சிவராம நாதன் வாழ்க !
சேதுவுடன் தனுக்கோடி தீர்த்தம் வாழ்க !
திகழ்தீர்த்தம் அறுநான்கும் சிறந்து வாழ்க !
நாதன் இரா மேச்சுரனை அருச்சிப்போரும்,
நல்தானம் தவம் அனைத்தும் நயந்து வாழ்க !
மாதவர்கள் மிக வாழ்க, இராமநாத
மாமுனிவன் நீடுழி வாழ்க மாதோ !

திருச்சிற்றம்பலம்.

தேவஸ்தானத்தில் நடத்தப்படும் மாபெரும் திருப்பணிக்குத் தாராளமாக நன்கொடை வழங்கக் கேட்டுக்கொள்ளப்படுகிறது. இந்த நன்கொடைக்கு வருமானவரி விலக்கு அளிக்கப்படுகிறது.

இரண்டாவது தொடக்கம் கோடி அர்ச்சனையில் இராமநாதப்பெருமானுக்குச் சகஸ்ரநாம அர்ச்சனை செய்வதன் மூலம் திருப்பணிக்கு உதவுங்கள். அர்ச்சனை ஒன்றுக்குக் கட்டணம் ரூ. 10/-.



ஸ்ரீ பர்வதவர்த்தினி தங்கப் பல்லக்கில் பவனி வருதல்.